# 'ஜெ'யை வரவேற்க மதுரை தயாராகிறது!



"சரிந்து வரும் ஜெ.யின் செல்வாக்கைத் தூக்கி நிறுத்தத்தான் மதுரையில் சாதனை மாநாடு" என்று எதிர்க்கட்சியினர் குறிப்பிட்டாலும், அ. தி. மு. க. வட்டாரத்தில் யாரும் இந்தக் கருத்தை ஸீரியஸாக எடுத்துக் கொள்ளவில்லை. "எங்கள் ஆட்சியின் ஒரு வருட சாதனைகளை விளக்கவே இந்த மாநாடு. எங்கள் கழகத்தைப் பொறுத்தவரை, மக்களைக் கவரும் ஒரே தலைவர் முதல்வர்தான். தி.மு.க.வைப் போல எங்கள் கழகம் பட்டிதொட்டியெங்கும் தினமும் பொதுக் கூட்டம் நடத்துவதில்லை. ஆகையினால் இதுபோன்ற ஒரு மாநாட்டைப் பிரம்மாண்டமாக நடத்தி மக்களைக் கவருகிறோம். செல்வாக்குச் சரிவது என்ற பேச்சுக்கே இடமில்லை. புலிகளை அடக்கி, அவர்கள் இயக்கத்துக்குத் தடை விதிக்கச் செய்த ஒரே காரணத்திற்காக எங்கள் தலைவி இன்னமும் முப்பதாண்டுகளுக்கு முதல்வராக இருப்பார்" என்றார் அ.தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

"ஆளும் கட்சியின் மாநாடு என்றால் அதிகார துஷ்பிரயோகத்துக்குக் கேட்க வேண்டுமா" என்கிறார் தி. மு. க. எம். எல். ஏ. பரிதி இளம்வழுதி. "தமிழகம் முழுவதிலும் உள்ள பஸ் அதிபர்கள், தொழிலதிபர்கள், வணிகர்கள் ஆகியோரிடம் நிதி வசூலிக்கப்படுகிறது. இதற்காகவே "மூவர் அணி"யினரைக் (மந்திரிகள் செங்கோட்டையன், அழகு திருநாவுக்கரசு, கண்ணப்பன்) கொண்ட நிதிக்குழு அமைக்கப்பட்டிருக்கிறது. ஏறும் விலைவாசி, விவசாயிகளுக்குப் புதிதாக விதிக்கப்பட்ட மின் கட்டணம், பால், அரிசி விலை உயர்வு, அரசு நிலம் அபகரிப்பு, கட்-அவுட் கலாசாரம் என்று பொது மக்களில் அனைத்துத் தரப்பினரும் இந்த அரசின் மீது வெறுப்புற்றிருக்கிறார்கள். போதாததற்கு தெருவுக்கு தெரு 'பார்' வேறு. இந்த நிலையில், தேர்தலை வைத்தால் தோல்வியைக் கவ்வ நேரிடும் என்றுதான் வறட்சியைக் காரணம் காட்டி, பழனி மக்களவைத் தேர்தலை ஒத்தி வைத்து விட்டார்கள். ஆனால் வறட்சிச் சூழ்நிலையில் இவர்கள் மாநாடு மட்டும்



கண்ணப்பன்



அழகுதிருநாவுக்கரசு



செங்கோட்டையன்



பரிதிஇளம்வழுதி

நடத்துவார்களாம்! இது எப்படி இருக்கு? எல்லோரையும் எல்லா நேரத்திலும் ஏமாற்ற முடியாது. தமிழக மக்கள் விழித்துக் கொண்டு விட்டார்கள்'' என்றார் அவர்.

**இ**தற்கிடையில் ஜெ.வை வரவேற்க மதுரை தயாராகிக் கொண்டிருக்கிறது. மாநாட்டு ஏற்பாடுகளில் மூவர் அணியினர் முக்கியப் பொறுப்பாளர்களாக இருந்தா லும், 18 குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. உணவு, சுகாதாரம், விளம்பரம், கண்காட்சி என்று ஒவ்வொரு குழுவுக்கும் பங்கு கொடுக்கப்பட்டுள்ளது. வீரப்பன், ராசா ராம், சாத்தூர் ராமச்சந்திரன், மதுரைக்கு அந்தப் பக்கம் புகழ்பெற்ற கருப்பசாமி பாண்டியன் ஆகியோருக்கு எந்தக் குழு விலும் இடம் இல்லை.

ஜெ.வும், சசிகலாவும் தங்குவதற்கு, 50 லட்சம் செலவில் அரசு விருந்தினர் மாளிகை புதுப்பிக்கப்படுகிறது. தரை விரிப்புகள், திரைச்சீலைகள், கதவு, ஜன்னல்கள் எல் லாம் மாற்றப்படுகின்றன. சுற்றி ஏழரை அடி உயர புது மதில்சுவர் கட்டப்படுகிறது. மாநாடு நடைபெறும் ரேஸ் கோர்ஸ் திடலை சுத்தப்படுத்திப் பந்தல் போடும் வேலை சுறுசுறுப்பாக நடைபெறுகிறது. மாநாட்டின் முகப்பை அலங்கரிக்கும் பொறுப்பை, 'இரண்டெழுத்து, பட அதிபர் தலைமையில் திரைக்கலைஞர்கள் ஏற்றுக் கொள்ள இருக்கிறார்கள். பொதுப் பணித் துறை தனது ஒப்பந்தக்காரர்களைப் பணி யில் அமர்த்தி இருக்கிறது. கூடவே ''அர சாங்க இயந்திரத்தை துஷ்பிரயோகம் செய்ய மாட்டோம்'' என்று அறிவித்திருக்கிறார்கள் மந்திரிகள். நுழைவுக் கட்டணம் தொண்ட ருக்குப் பத்து ரூபாயாம்.

**மா**நாட்டுக்கு மக்களைத் திரட்ட தமி ழகமெங்கும் 2000 பஸ்களை ஏற்பாடு செய் திருக்கிறார்களாம். ''என்னிடம் 25 பஸ்கள் கேட்டார்கள். ஆனால் நான் 15 பஸ்கள்தான் கொடுக்க முடியும்'' என்று சொல்லிட்டேன் என்றார் வட ஆற்காட்டைச் சேர்ந்த பஸ் அதிபர் ஒருவர்.

'தமிழக வரலாற்றிலேயே இதுபோல் சிறப்பான ஊர்வலம் நடந்ததேயில்லை, இனி நடக்கப் போவதில்லை என்ற அள வுக்கு ஊர்வலத்தின் மாட்சி இருக்க வேண்டு'மென்று புரட்சித் தலைவி உத்தர விட்டுள்ளதால் மந்திரிகள் மாநாட்டு ஏற் பாடுகளில் பிஸியாக சுற்றிக் கொண்டிருக் கிறார்கள். கோட்டையில் கோப்புகள் தேங் கிக் கிடக்கின்றன.

'ஜெ.யின் முகதரிசனம் கிடைத்தால் போதும் என்று மக்கள் காத்துக் கொண் டிருக்கிறார்கள்... நீர் என்னய்யா குறை சொல்லிக் கொண்டு...' என்று முணுமுணுக் கிறீர்களா! அதுவும் சரிதான்!

– திலலப்பா





# கிருஷ்ணன் தேடிப் பிடித்த கிருஷ்ண மூர்த்திகள்!

**நா**ன்கு மாப்பிள்ளைகள். அந்த நான்கு பேருக்கும் ஓர் அபூர்வ ஒற்றுமை என்ன தெரியுமா? நான்கு பேருக்குமே கிருஷ்ணமூர்த்தி என்றே பெயர். திருச்சியைச் சேர்ந்த முத்துக்கிருஷ்ணன் - மங்களம் தம்பதிக்கு இப்படி மாப்பிள்ளைகள் அமைந்தது எப்படி? முத்துக்கிருஷ்ணனின் இரண்டாவது மகள் ஜலஜாவிடம் கேட்டோம்.

''என் அக்கா லலிதா எஸ். எஸ். எல். சி. முடித்த சமயம், எங்கள் உறவுக்காரர் திருமணத்துக்குப் போயிருந்தோம். ஒரு கல்யாணத்தில், இன்னொரு கல்யாணப் பேச்சு ஆரம்பமாகும் என்பார்களே அதே போல, கல்யாண வயதில் பிள்ளை வைத்திருந்த ஓர் உறவுக்காரர், 'நல்ல பெண் யாராவது இருந்தால் சொல்லுங்களேன்' என்று பொதுப்படையாய்க் கூற, 'இந்தப் பையனுக்கு அந்தப் பெண்ணைப் பார்க்கலாமா? அந்தப் பெண்ணுக்கு இந்தப் பையனைப் பார்க்கலாமா?' என்று பல திருமண வயதுப் பெண்கள் - பிள்ளைகள் பற்றியும் அலசினார்கள். கடைசியில் போலீஸில் ரேடியோ ஆபீஸராக வேலை பார்க்கும் ஓர் இளைஞர், என் அக்காவை மணந்து கொள்ளத் தயார் என்று பச்சைக் கொடி காட்ட, ஜாதகப் பரிவர்த்தனை நடந்தது. திருமணம் முடிவானது. மாப்பிள்ளை பெயர் கிருஷ்ணமூர்த்தி.

''அடுத்து, எனக்கு வரன் பார்க்க ஆரம்பித்தார்கள். என் சகோதரர், பத்திரிகைகளில் கதைகள் எழுதிக் கொண்டிருந்த தமது நண்பரிடம், ''என் சகோதரிக்கு மாப்பிள்ளை தேடுகிறோம்; நல்ல பையன் யாராவது இருந்தால் சொல்லேன்!'' என்று கேஷுவலாய்க் கூற, அந்த நண்பரோ ''ஏன், என்னைப் பார்த்தால் நல்ல பையனாய்த் தெரியவில்லையா?'' என்று கேட்க, 'அவர் ஜோக் அடிக்கிறாரா? சீரியஸாய் சொல்கிறாரா?' என்று புரியாமல் என் சகோதரர் குழம்ப, ''சீரியஸாய்த்தான் கேட்கிறேன்!'' என்றார் அவர். அவருடைய ஜாதகத்தைக் கேட்ட போது, 'ஜாதகமெல்லாம் இல்லை' என்று கூறி விட்டார். 'அதனால் என்ன? பரவாயில்லை' என்று கூறி விட்டார் என் அப்பா. எங்கள் திருமணம் நடந்தது. என் கணவர் பெயரும் கிருஷ்ணமூர்த்தி.

''மூன்றாவதாக, என் முதல் தங்கை பத்மாவுக்கு மாப்பிள்ளை பார்த்த போது, எங்கள் உறவிலேயே ஆசிரியராய் வேலை பார்த்து வந்த கிருஷ்ணமூர்த்தி என்பவருக்கு அவளைத் திருமணம் செய்து வைப்பது என்று முடிவு செய்தோம்.

''நான்காவதாக ஸ்வர்ணாவுக்கு மாப்பிள்ளை தேடிய போது நாங்கள் போட்ட கண்டிஷன் என்ன தெரியுமா? 'பையன் பெயர் கிருஷ்ணமூர்த்தி என்று இருக்க வேண்டும். மற்ற விஷயங்களை எல்லாம் அட்ஜஸ்ட் செய்து கொள்ளலாம்!' இதைக் கேட்டதும், தாம் வேலை பார்க்கும் மில்லில் ஆடிட்டுக்கு வந்த இளைஞரான கிருஷ்ணமூர்த்தியை அறிமுகப்படுத்தினார் எங்கள் மாமா. ஆக, நான்காவது மாப்பிள்ளையும் கிருஷ்ணமூர்த்தி!

''இன்னோர் ஒற்றுமை, நான்கு பேருக்கும் இனிஷியல் எஸ். தான்! அதனால் நான்கு மாப்பிள்ளைகளையும் எங்கள் வீட்டில் எஸ். கே. எம். 1; எஸ். கே. எம். 2; எஸ். கே. எம். 3; எஸ். கே. எம். 4 என்றுதான் குறிப்பிடுவோம்.''

தகவல் : எஸ். சந்திரமௌலி



☛ பிரதமர் நரசிம்மராவுடன்...

# பரபரப்பான ஒரு பதவிக்காலம்

கடந்த 1990-ம் ஆண்டு நவம்பர் மாதம் இரண்டாவது வாரத்தில், நாட்டின் முழுக் கவனமும் ஜனாதிபதி மாளிகை மீதே இருந்தது. ''இந்தச் சூழ்நிலையில் ஜனாதிபதி எப்படிச் செயல்படப் போகிறார்?'' என்பதே அரசியல்வாதிகள் மத்தியில் மட்டுமல்ல; சாதாரண மக்களிடமும் பேச்சாக இருந்தது.

மெஜாரிட்டி பலம் இழந்த வி. பி. சிங் அரசு, பதவியை விட்டு விலகியது. அடுத்து ஆட்சி அமைக்கும் அளவுக்கு எந்தக் கட்சிக்கும் பெரும்பான்மை கிடையாது. எந்தக் கட்சியும் தேர்தலைச் சந்திக்கவும் விரும்பவில்லை. இந்தச் சூழ்நிலையில் கிட்டத்தட்ட மூன்று நாட்கள் எல்லா கட்சித் தலைவர்களையும் பிரபல சட்ட நிபுணர்களையும் கலந்தாலோசித்தார் ஜனாதிபதி.

கடைசியில் 205 பேர் கொண்ட காங்கிரஸ் கட்சி ஆதரவு கொடுக்க, அறுபது பேர் கொண்ட ஜனதா தள உதிரி அணியான சந்திரசேகர் அணி பதவியில் அமர்ந்தது.

''இப்படித்தான் 1979-ல் காங்கிரஸ், சரண்சிங்குக்கு ஆதரவு கொடுக்கிறேன் பேர்வழி என்று கடைசியில் காலை வாரிவிட்டது. அதே நிலை தான் சந்திரசேகருக்கும்'' என்று சொல்லப்பட்டது.

ஆனால், ஜனாதிபதி புத்திசாலித்தனமாக ராஜீவ் காந்தியிடம், ஆதரவுக் கடிதம் ஒன்றை எழுத்து மூலம் வாங்கிக் கொண்டார். மண்டல், மஸ்ஜித் என்று கலவரச் சூழ்நிலையாக இருந்த நாடு, அமைதிப் பாதையில் திரும்பியது. தேர்தல் நடத்த உகந்த சூழ்நிலை உருவாயிற்று. பொது வாழ்க்கையில் தமக்கு உள்ள அனுபவத்தையும், அரசியல் விவேகத்தையும் பயன்படுத்தி, ஜனாதிபதி ராமசாமி வெங்கடராமன் எடுத்த

☛ வி. பி. சிங் பிரதமராகப் பதவியேற்ற போது...

முடிவு எந்தவித எதிர்விளைவையும் ஏற்படுத்தவில்லை. மாறாக, 'ஜனாதிபதி சரியாகத்தான் செய்தார்' என்ற கருத்து பலப்பட்டது. இதற்குக் காரணம் அவரது அரசியல் விவேகம் மட்டுமல்ல; சகல தலைவர்களும் அவரை மதித்து அவரது கருத்துக்களை ஏற்றுக் கொண்டதுதான்.

அடுத்த மாதம் கடைசி வாரத்தில் ஜனாதிபதி பதவியை விட்டு விலகி வருகிறார் வேங்கடராமன். எந்த ஜனாதிபதிக்கும் கிடைக்காத பல புது அனுபவங்கள் வேங்கடராமனுக்குக் கிடைத்தன. தமது பதவிக்காலத்தில் ராஜீவ் காந்தி, வி.பி. சிங், சந்திரசேகர், நரசிம்மராவ் என்று நான்கு பிரதமர்களைக் கண்டது இவர் ஒருவர்தான்!

அடிப்படையில் அவர் ஒரு காங்கிரஸ்காரராக இருந்த போதிலும் அந்த நிலையிலிருந்து உயர்ந்து நின்றார். எதிர்க்கட்சிப் பிரதமர்களான வி.பி. சிங், சந்திரசேகர் ஆகியோரிடமும் நல்லுறவு இருந்தது அவருக்கு. ராஜீவ் காந்தி கோரமாகக் கொலை செய்யப்பட்ட போது, ஆழ்ந்த சோகத்தில் அவர் இருந்தாலும் இந்திரா காந்தி இறந்த போது ஏற்பட்ட கலவரம் போல ஏற்பட்டு, ஆயிரக்கணக்கான உயிர்கள் பலியாகி விடப் போகிறதே என்ற முன்னெச்சரிக்கை உணர்வினால், அவரது நேரடி மேற்பார்வையில் எடுக்கப்பட்ட பல நடவடிக்கைகள் காரணமாகப் பெரிய கலவரங்கள் - உயிர்ப் பலிகள் தவிர்க்கப்பட்டன. இதை யாரும் மறுக்க முடியாது.

தமது ஐந்து வருட பதவிக் காலத்தில், கடைசியாகச் சென்று வந்த சீனம் உட்பட இரண்டு டஜன் வெளிநாடுகளுக்கு விஜயம் செய்திருக்கிறார் வேங்கடராமன். அவர் சென்ற எல்லா நாடுகளுடனும் இந்தியாவின் நட்புறவு மேலும் பலப்படப் பாடுபட்



☛ சந்திரசேகர் பிரதமராகப் பதவியேற்ற போது...

டிருக்கிறார். நாட்டின் மரியாதையை உயர்த்தியிருக்கிறார்.

ஆர். வி. யின் பதவிக் காலம் சர்ச்சைகளுக்கே இடமளிக்காதது என்று கூறிவிட முடியாது. குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால், அப்போதைய தமிழக கவர்னர் பர்னாலா அறிக்கை கொடுக்காமலேயே, கருணாநிதி அரசைக் கவிழ்த்தது; அதைக் கண்டித்து பீகார் மந்திரி சபை தயாரித்த ஓர் அறிக்கையைப் படித்த பீகார் கவர்னர் முகமது யூனஸை பதவியை விட்டு நீக்கியது போன்ற விஷயங்களைக் குறிப்பிடலாம்! சந்திரசேகர் அரசு ஒரு முழு பட்ஜெட் தாக்கல் செய்யாமல் 'நிதி வோட்டெடுப்பு' (vote on account) மட்டும் நடத்தியது, பி. ஜே. யிடமிருந்து கடும் கண்டனத்தைப் பெற்றது. இந்தக் காரணங்களால், குடியரசுத் தலைவரின் உரையை எதிர்க்கட்சிகள் ஒட்டுமொத்தமாகப் பகிஷ்கரித்தன. சுதந்திர இந்தியாவில் இதெல்லாம் முதல் முறையாக நடந்தன.

''இதற்கெல்லாம் ஜனாதிபதியை நேரடியாகக் குறைகூற முடியாது. அரசியல் சட்டம் 74-ன் படி பிரதமர் தலைமையிலான அமைச்சரவை முடிவுகளின்படிதான் ஜனாதிபதி செயல்பட இயலும். பல நேரங்களில் மனசாட்சிக்கு விரோதமாகக் கூட ஜனாதிபதி செயல்படுவது என்பது தவிர்க்க முடியாது'' என்று சொல்கிறார் பிரபல வழக்கறிஞர் டோலியா.

**தா**ம் பதவியேற்றவுடன் பேசிய கன்னிப் பேச்சில் ஆர். வி. ''ராஜேந்திர பிரஸாத், ராதாகிருஷ்ணன், ஜாகிர் உசேன் போன்ற முன்னாள் ஜனாதிபதிகள் ஏற்படுத்தி விட்டுப் போன நல்ல மரபுகளையும், வழிகாட்டுதல்களையும் கவனத்தில் கொண்டு செயல்படுவேன்'' என்றார். அதன்படி நடந்து கொள்ளவும் தம்மாலியன்ற அளவு முயற்சி மேற்கொண்டிருக்கிறார்.

''பாராளுமன்றத்தில் ஓ. கே. செய்யப்பட்டு வந்த சில சர்ச்சைக்குரிய சட்ட முன்வடிவுகளைத் திருப்பி அனுப்பிய 'பெருமை' சில முன்னாள் ஜனாதிபதிகளுக்கு உண்டு. ராஜேந்திர பிரஸாத், இந்து சட்டத்தை சுப்ரீம் கோர்ட் பரிசீலனைக்கு அனுப்பினார். ஜெயில் சிங், தபால்கள் தணிக்கைச் சட்டத்துக்கு ஒப்புதல் தர மறுத்தார். ஆனால் ஆர். வி. இது போன்றெல்லாம் செயல்படவில்லை. 1988ம் ஆண்டு அவதூறு சட்டத்தை ராஜீவ் கொண்டு வந்த போது, நாடெங்கும் பத்திரிகையாளர்களிடையே எதிர்ப்பு எழுந்தது. பிடிவாதமாக இருந்த ராஜீவ் காந்தியைக் கூப்பிட்டு, பக்குவமாகப் பேசி, மேல் நடவடிக்கை எதுவும் இல்லாமல் சட்டத்தை முடக்கியதில் முன்னாள் பத்திரிகையாளரான ஆர். விக்கும் பங்கு உண்டு.

''இந்திராகாந்தி தரையை பெருக்கச் சொன்னாலும் செய்வேன்'' என்று பேசிப் பதவியின் தரத்தைக் குறைத்தார் ஜெயில் சிங். அது மட்டுமல்லாமல், கடைசிக் காலத்தில் ராஜீவுடன் பல கருத்து முரண்பாடுகள். இதனால் ஜனாதிபதி பதவியின் கௌரவம் வேகமாகக் கீழே சறுக்கிய காலகட்டத்தில் தான் ஆர். வி. பொறுப்பேற்றுக் கொண்டார். ''ஜனாதிபதி பதவிக்கும், மாளிகைக்கும், மீண்டும் கௌரவத்தையும், மதிப்பையும் ஏற்படுத்திக் கொடுத்த பெருமை ஆர். வி.யைச் சேர்ந்தது'' என்கிறார் டோலியா.

**ஆ**ந்திராவில் கண்டூர் என்ற இடத்தில் அரிஜனங்களின் மீது நடத்தப்பட்ட தாக்குதலைக் கண்டித்து, மகஜர் தர 106 தாழ்த்தப்பட்ட எம்.பிக்கள், ஜனாதிபதியைச் சந்திக்க விரும்பினார்கள். ஆனால் ஜனாதிபதி அலுவலகமோ, 'எல்லோரும் வர வேண்டாம்; பிரதிநிதிகளாக ஐந்து பேர் வந்தால் போதும்' என்று சொன்னது. உடனே, 'ஜனாதிபதி தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த எம்.பி.க்களைச் சந்திக்க மறுத்தார்' என்று சர்ச்சை கிளப்பப்பட்டது.

''ரொம்ப வேடிக்கையான குற்றச்சாட்டு!'' என்று சொன்னார் ஆர். வி.யின் நீண்ட கால நண்பரும், தொழிலதிபருமான ஒருவர். ''தமது தொழிற்சங்கப் போராட்டங்களின் போதும் சரி, மத்தியில், மாநிலத்தில், மந்திரியான போதும் சரி, ஜாதி, மதம், மொழி என்ற பாகுபாடு இல்லாமல், எல்லோருக்கும் பாடுபட்டிருக்கிறார் ஆர். வி. பாதுகாப்பு போன்ற பல காரணங்களால் எல்லோரையும் ஒரே சமயத்தில் சந்திக்க இயலாத நிலை இருந்தது. ஊர்வலம் என்று வருபவர்கள் தங்கள் சார்பில் ஒரு பிரதிநிதிக் குழுவை முதல்வர் அல்லது ஆளுனரிடம்



நீதிபதி : நீ ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?

குற்றவாளி : சட்டத்தில் ஏதாவது 'ஓட்டை' இருக்கான்னு பாருங்க எசமான்!

– ஆர். வசந்தகுமார்

# இரு வித அனுகூலங்களுடன் உங்கள் குழந்தையைப் பள்ளிக்கு அனுப்புங்கள் !

## ருசி + ஊட்டச்சத்து கொண்ட பானி மிக்ஸ்.

ஆரோக்கிய வாழ்க்கைக்கு
ஊட்டச்சத்து மிகுந்த உணவு தேவை.
பானிமிக்ஸ் ஊட்டச்சத்து நிறைந்தது.
எனவே உங்கள் குழந்தைக்கு இதனைத்
தவறாமல் அன்றாடம் கொடுங்கள். இதில்
சுவையான ஆப்பிள், மாம்பழம், பேரீச்சை,
திராட்சை, முந்திரியுடன், கோதுமை,
அரிசி மற்றும் சோளமும் அடங்கியது.
இவை அனைத்தும் குழந்தைக்குத்
தேவையான கூடுதல் சத்தை அளிக்க
வல்லது.

**பானிமிக்ஸ் தயாரிக்க எளிது**
சமைக்கத் தேவையில்லை
தேவையான அளவை
கிண்ணத்தில்
போடவும். முன்னமே
கொதிக்க வைத்த
பாலைச் சேர்க்கவும்.
மிருதுவான பாரிட்ஜ்
கிடைக்க மெதுவாக கலக்கவும்.






உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ.

GL/3/89-R-TAM



"நான் பாடம் நடத்திக்கிட்டிருக்கேன். நீ தூங்கிக்கிட்டிருக்கே. உனக்கு என்ன தண்டனை தர்றது?"

"நடத்தின பாடத்தையே திருப்பி நடத்துங்க போதும்!"

- எம். அசோக்ராஜா

அனுப்புவது சகஜம்தானே. இதிலென்ன சங்கடம்? குறுகிய மனம் கொண்டவர்களால் இப் பிரச்னை ஜனாதிபதிக்கு எதிராக திசை திருப்பி விடப்பட்டது'' என்றார் அவர்.

ஜனாதிபதியின் மகள் தமது விலாசத்திலிருந்து இயக்கிய அறக்கட்டளைக்கு, ஜனாதிபதி சிபாரிசு செய்து நிதி பெற்றுத் தந்தார் என்றும், செயலாளர் 'பாப்' முராரி, நிதி வசூலிப்பதற்கான சிபாரிசுக் கடிதங்களைத் தமது கைப்பட எழுதினார் என்றும், சமீபத்தில் சுப்பிரமணிய சுவாமி ஊரெங்கும் முழங்கினார்.

''இவ்வளவு பெரிய பதவி வகிப்பவர்கள் மீது சேற்றை வாரி வீசுவது சுப்பிரமணிய சுவாமி போன்ற அரசியல்வாதிகளுக்குப் பழக்கமானதாக இருக்கலாம். ஜனாதிபதி மகள் ஏழைகளுக்கு வேலை வாய்ப்பு உதவி செய்ய அறக்கட்டளை ஒன்று வைத்திருக்கிறார் என்பது உண்மைதான். அது ஒன்றும் தவறு அல்ல; ஆனால், அதற்காகத் தமது பதவியைத் தவறாகப் பயன்படுத்தி, நிதி வசூலிக்க, நிச்சயமாக ஆர். வி. உடன்பட்டிருக்க மாட்டார் என்பது அவரை நெருங்கியவர்களுக்குத் தெரியும். நாட்டு நன்மையை மனத்தில் கொண்டு செயல்படுபவர் ஆர். வி. தாம் வகிக்கும் பதவிக்கு இழுக்குக் கற்பிக்கும் வேலையை ஆர். வி. ஒருபோதும் செய்ய மாட்டார். சுவாமி, தற்போது ஜனாதிபதி மீது குற்றச்சாட்டுக்கள் வீசக் காரணம், தகுதியில்லாத அவரது மனைவியைத் தில்லி உயர்நீதிமன்ற நீதிபதியாக நியமிக்க ஜனாதிபதி மறுத்தார் என்பதால் தான் என்று, நாடு முழுவதும் உள்ள நீதித்துறை வட்டாரத்தில் பேசப்படுகிறது'' என்கிறார் டோலியா.

இதில் இன்னொரு சங்கடம் என்னவென்றால், ஜனாதிபதி பதவி சர்ச்சைகளுக்கு அப்பாற்பட்டது என்பதால் ஜனாதிபதி, இதுபோன்ற குற்றச்சாட்டுக்களுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. அது அந்தப் பதவியின் மதிப்பைக் குறைத்து விடுவதாகும். அறக்கட்டளையின் சார்பில் பதில் கூறப்பட்டுள்ளது என்றாலும் மிகச் சிறந்த பதில் அறக்கட்டளையின் எதிர்காலச் சாதனைகளாகத்தான் இருக்க முடியும்.

ஆர். வி. 1930களில் பொது வாழ்க்கையில் இறங்கியவர். தொழிற் சங்கப் பணிதான் அந்தப் பொது வாழ்க்கையின் அஸ்திவாரமே. அப்படிப்பட்டவர் தொழிலாளர் நலனுக்கு விரோதமாக எண்ணுவாரா? என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். 'நாட்டில் நிலவும் அபாயகரமான பொருளாதார நிலையை உத்தேசித்து சில காலத்துக்கு வேலை நிறுத்தம் - கதவடைப்புகளை மூட்டை கட்டி வைப்போம்' என்று அவர் மிகுந்த நல்லெண்ணத்துடன் கூறியது கூட திரித்துப் பேசப்பட்டது என்பது அவருக்கு மனவருத்தத்தை அளித்திருக்கும். ஆனால் அதை வெளிக் காண்பித்துக் கொள்ளக் கூட ஜனாதிபதியால் முடியாது! அந்தப் பதவி அப்படிப்பட்டது.

நீண்ட காலமாகப் பல்வேறு முக்கியமான பொறுப்புக்களை வகித்த ஆர். வி., எல்லாவற்றையும் விட மணிமகுடமாக, இந்தியாவின் முதல் குடிமகன் என்ற பதவியோடு ஓய்வு பெறுவது சாலப் பொருத்தம்தான். மூச்சு முட்டும் தில்லி அரசியல் சூழ்நிலைகளில் இருந்து விடுபட்ட பிறகு, அமைதியான கோட்டூர்புரத்தில் குடியேற இருக்கிறார் ஆர். வி. இங்கு வந்ததும் 1950களில் அவர் துவங்கிய ''தொழிலாளர் சட்டம்'' என்ற பத்திரிகைப் பணியில் மீண்டும் ஈடுபட இருக்கிறாராம்.

பதவிக் காலத்தில் தமக்குக் கொடுக்கப்பட்ட விலையுயர்ந்த பரிசுப் பொருட்களையெல்லாம் ஜனாதிபதி மாளிகையிலேயே கண்காட்சி போல் வைத்து விட்டு வரப் போகிறார். அவரின் மார்பளவுச் சிலை ஒன்று செய்யப்பட்டு, மாளிகையின் முதல் மாடியில் வைக்கப்பட்டிருக்கிறது.

ஜனாதிபதி பதவி, இந்தியாவைப் பொறுத்தமட்டில் ஓர் அலங்காரப் பதவிதான். அப்படிப்பட்ட பதவியில் ஐந்து வருடங்களைச் செலவிட்டு விட்டதால் ஆர். வியின் அனுபவமும், திறமையும் நாட்டிற்குக் கிடைக்காமல் போய் விட்டதாகச் சொல்வார்கள் சிலர். அந்தக் கருத்து ஓரளவு சரிதான் என்றாலும், ஓய்வு பெற்ற பிறகு கூட அவரை அணுகி ஆலோசனைகளைப் பெற்றுக் கொள்ளலாமே!

- ப்ரியன்

# குறும்புக் கவிஞர் கண்ணதாசன்!

**ப**ல்லாண்டுகளுக்கு முன்பு, மதுரை அமெரிக்கன் கல்லூரித் தமிழ் மன்றத்தின் சார்பில் ''காலமும் கவிதையும்'' என்ற தலைப்பில் பேசுவதற்கு ஒப்புக் கொண்டிருந்தார் கவியரசர். அதே தலைப்பில் கவிதை பாடுவதற்கும் சம்மதித்திருந்தார். அந்த நிகழ்ச்சியில் கல்லூரி மாணவர்கள் சிலரும் தங்கள் கவிதைகளை அரங்கேற்றம் செய்ய இருந்தனர்.



கல்லூரி நிகழ்ச்சிக்கு வந்து சேர்ந்த கண்ணதாசனின் நெஞ்சில் குறும்புத்தனம் அரும்பியது. கவியரங்கில் பங்கு கொண்ட மாணவர்களுள் ஒருவரை அழைத்து, ''உங்கள் கவிதையை என்னிடம் கொடுங்கள்; நான் அதைப் படிக்கிறேன்; நீங்கள் என் கவிதையைப் படியுங்கள். ரசனை எப்படி இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளலாம்'' என்று கவியரசர் ரகசியமாகக் கூற அந்த மாணவரும் ஒப்புக் கொண்டார்.

முதலில் அந்த மாணவர் கவியரசர் எழுதிய கவிதையைத் தாம் எழுதியது போலவே படித்தார். கைத் தட்டல் எதுவும் கிடைக்க வில்லை. இறுதியில், மாணவர் எழுதிய கவிதையைக் கவியரசர் படித்தார். பலத்த கைத் தட்டல்! வரிக்கு வரி கைத் தட்டல் குவிந்தது. கவியரசர் தமது உரையைத் தொடங்கிய போது உண்மையை எடுத்துரைத்தார். பிறகு, ''இந்தக் காலத்தில் யாருடைய வாயிலிருந்து கவிதை வருகிறது என்று பார்த்துத்தான் வரவேற்கிறார்கள். இதுதான் 'காலமும் கவிதையும்''' - என்று தமது சொற்பொழிவுத் தலைப்புக்கு ஏற்ற தொடக்கமாக அந்நிகழ்ச்சியை அமைத்தார்.

**வெ**ளியூர்களுக்குக் காரில் செல்லும்போது, சில ஊர்களில் ரயில்வே கேட் அடைக்கப்பட்டிருக்கும். அந்த நேரத்தில் அவித்த வேர்க்கடலையும் மோரும் ஆசையுடன் வாங்கிச் சாப்பிடுவார் கவியரசர்.

ஒரு சமயம் இரண்டு கிளாஸ் மோர் வாங்கி அருந்திவிட்டு, இருபது காசு தருவதற்குப் பதிலாக இரண்டு ரூபாய் கொடுத்தார். மோர்க்காரப் பெண் மன மகிழ்ச்சியுடன் சென்றாள்!

காரிலிருந்த கவியரசரின் துணைவியார், ''என்னங்க இது, காசை இப்படி அநியாயமாக் கொடுக்குறீங்க'' என்று பதற்றத்துடன் கேட்டார்.

உடனே கவியரசர், ''இந்தா பாரு! வேலை கெடைக்கலேன்னு சொல்லிக்கிட்டு பிச்சை எடுக்காமே, ஒரு தொழிலைச் செய்றாளே ஒருத்தி, அவளைப் பாராட்ட வேண்டாமா? அதுக்காகத்தான் கொடுத்தேன்'' என்று கூறினார்.

**மெ**ல்லிசை மன்னர்களில் ஒருவரான எம்.எஸ். விஸ்வநாதன் அவர்களுடன் விளையாடுவதில் அளவற்ற ஈடுபாடு கொண்டவர் கவியரசர். அவரது இடுப்பில் கை வைத்துக் கூச்சம் காட்ட முனைவார். கூச்சத்தைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் அலறுவார் விச்சு. அந்த நேரத்தில் விச்சுவின் வாய் என்னென்ன வார்த்தைகளையோ உதிர்க்கும்.

''கவிஞர்ப் பையா போ''... என்று கூப்பாடு போடுவார் சில சமயம்.

''தடிக் கவிஞ்சா....'' இப்படிச் சில சமயங்களில் அலறுவார்.

''சாம்பிர தலையாண்குப்பி'' - இப்படி ஒரு வாசகத்தை உதிர்ப்பார். ஐம்பது

தமிழ்ப்பித்தன்

வயதைத் தாண்டியவர்களுக்கு இந்த வாசகம் 'புத்தி மான் பலவான் ஆவான்' என்ற பழைய திரைப்படத்தில் ஒலித்த 'கன்டிவியுடி' சொல் என்பது புரியும்.

கவியரசர் ஒருவர்தான் விக்கவுடன் இந்த அளவு விளையாட உரிமை பெற்றிருந் தார். கனமயான பாட்டுப் பணியை இது போன்ற விளையாட்டுத் தனத்தின் வாயி லாக, கவையான பணியாக மாற்றிவிடுவார் கவியரசர்.

ஒரு முறை விபரீத விளையாட்டில் கூட ஈடுபட்டார் கவியரசர். 1969 ஆம் ஆண்டில் ஒருநாள் ஆழ்வார்ப்பேட்டைப் பகுதியில் முருகப்பன் என்னும் நண்பரைச் சந்திப்பதற்காக அவரது இல்லத்திற்குச் சென்றிருந்தார். அங்கிருந்த தொலைபேசி அவரது கண்களில் பட்டது. டயலைச் சுழற் றினார். ஒரு நண்பரிடம் பேசினார். குரலைச் சற்று மாற்றிக் கொண்டு, ''கண்ணதாசன் மாரடைப்பால் காலமாகி விட்டார்'' என்று அந்த நண்பரிடம் செய்தி வாசித்தார். சில விநாடிகளில் செய்தி தீ போலப் பரவியது. கவியரசரின் இல்லத்திற்குப் பலர் ஓடோடி வந்தனர். அவர் தமது இல்லத்தின் முன் வாசலில் அமர்ந்திருப்பதைக் கண்டு கலக்கம் தவிர்த்துக் களிப்பில் மூழ்கினர்.

கவியரசர், ஒன்றுமே தெரியாதவர் போல் 'என்ன விஷயம்?' என்று விசாரித் தார். அவர்களில் ஒருவர் எப்படியோ தட்டுத் தடுமாறி, தொலை பேசியில் வந்த துயரச் செய்தியைக் கவியரசரிடம் சொல்லி விட்டார்.

''என் மீது பொறாமை கொண்ட எவரோ இப்படி வதந்தியைப் பரப்பியிருக் கிறார் பாருங்க!'' - மிகவும் சாவதானமாகப் பதிலளித்தார் கவியரசர்!

இந்த நிகழ்ச்சியின் விளைவாகத் தமிழுக்கு அரியதொரு கவிதை கிடைத்தது. தாம் மெய்யாகவே மரணம் எய்திவிட்டால் நண்பர்கள், உறவினர்கள் எப்படியெல்லாம் கலங்கிக் கண்ணீர் விடுவார்கள் என்பதைக் கற்பனை செய்து, கையறு நிலைக் கவிதை ஒன்றைத் தீட்டினார். 'இருந்து பாடிய இரங் கற்பா' என்ற அந்தக் கவிதையின் ஒரு பகுதி:

தேனார்செந் தமிழமுதைத்
 திகட்டாமல் செய்தவன்மெய்
  தீயில் வேக
போனாற்போ கட்டுமெனப்
 பொழிந்ததிரு வாய்நீரிற்
  புகைந்து போக
மானார்தம் முத்தமொடும்
 மதுக்கோப்பை மாந்தியவன்
  மறைந்து போக
தானேஎந் தமிழினிமேல்
 தடம்பார்த்துப் போகுமிடம்
  தவிமை தானே!

நம்முடைய சாவுக்குத் தாமே இரங்கற்பா எழுதிக் கொண்ட கவிஞர் உலகத்தில் கண்ணதாசனைத் தவிர வேறெவரும் இருக்க முடியாது.

## அடுத்த இதழ்....

### மத்திய சென்னைச் சிறப்பிதழ்

- முதல்வருடன் மோதிய எம்.எல்.ஏ!
- கல்லூரி மாணவ-மாணவியரின் காந்திஜி சேவை மையம்
- ஆட்சியாளர்களே கொஞ்சம் அயனாவரத்தையும் கவனியுங்கள்!



- இதோ ஒரு வித்தியாசமான தொண்டர்!
- தேர்தலுக்குத் தேர்தல் அடிபடும் மூங்கில் பாலம்!

## இப்பொழுது உங்கள் குழந்தைக்கு சாதாரண அரிசி தானியத்தைவிட மேலான உணவை கொடுங்கள்.

அ றி மு க ப் ப டு த் து கி றோ ம்

### ஃபாரெக்ஸ்-ரைஸ்
### பால் அடங்கியது

சுவையும் ஊட்டச்சத்தும் கொண்டது.

சாதாரண அரிசி தானியத்தைக் கொடுத்து குழந்தையின் திட உணவைத் தொடங்குவதைவிட ஃபாரெக்ஸ் – ரைஸ் அளியுங்கள்.

ஃபாரெக்ஸ் – ரைஸ் பாலின் ஊட்டமும், வைட்டமின்களும், தாதுப்பொருட்களும் கொண்டது. எளிதில் ஜீரணிக்கக் கூடியது.

தேவையான ஊட்டச்சத்தை சுவையான வழியில் உங்கள் குழந்தைக்கு கொடுக்க ஒரே வழி. ஃபாரெக்ஸ் – ரைஸ் நீருடன் கலந்து அளித்தால் போதுமானது.

| நான்கு மாதங்கள் முதல் |
|---|

**ஃபாரெக்ஸ்-ரைஸ்**
**சுவையுடன் வளரும் வழி.**






முக்கிய அறிவிப்பு: தாய்ப்பால் உங்கள் குழந்தைக்குச் சிறந்தது. நான்கு மாதங்கள் முதல், உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மட்டுமின்றி, தானிய உணவையும் கொடுங்கள்.

Gx.646.92.Tm

# பங்கு மார்க்கெட் ஊழல்: மக்களுக்கு நஷ்டம் 40,000 கோடி!

'ஹர்ஷத் மேத்தா கைது; அவர் தம்பி கைது' என்று செய்திகள் வருகின்றனவே தவிர, ஷேர் மார்க்கெட் வீழ்ச்சியால் நஷ்டப்பட்ட பல்லாயிரக் கணக்கான சராசரி மக்களைப் பற்றிப் பேச்சு மூச்சில்லை! ஷேர் மார்க்கெட்டில் விலைகள் ஏறுமுகம் என்றதும் ஆசைப்பட்டு வாங்கிப் போட்டவர்கள் இன்று தலையில் கைவைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். இவ்வாறு பொது மக்களுக்கு ஏற்பட்டுள்ள நஷ்டம் ரூ. 40,000 கோடி என்று மதிப்பிடப்பட்டுள்ளது! பாதிக்கப்பட்டவர்கள் எல்லோரும் பணக்காரர்கள் அல்ல. சாமானியர்கள். மத்திய தர வகுப்பினர். இவர்களில் பலர் தங்கள் சேமிப்பு முழுவதையும் இழந்து விட்டனர். இவர்களுக்கு யார் நஷ்டஈடு தரப்போகிறார்கள்? இவர்கள் தலையில் இடி விழுந்ததற்கு யார் பொறுப்பு?

> **இன்னும் கொஞ்ச நாள் ஆனால், ஷேர் மார்க்கெட் ஊழல் என்று ஒன்று நடந்ததாகவே நினைவிருக்காது! 'ஹர்ஷத் மேத்தாவா, யார் அது?' என்று கூடக் கேட்பார்கள்!**

ஜானகிராமன் கமிட்டி, அவசரம் அவசரமாக ஊழலை ஆராய்ந்து, சில புரோக்கர்களுடன் பல வங்கிகள் கூட்டுச் சேர்ந்து மோசடி செய்திருப்பதை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்திருக்கிறது. தனது இடைக்கால அறிக்கையில், வங்கிகள் பல தங்கள் பணத்தை புரோக்கர்களுக்குக் கிடைக்கச் செய்து, அவர்கள் ஷேர் மார்க்கெட்டில் விளையாட அனுமதித்திருக்கின்றன என்பது மிகவும் கவலை தரும் விஷயம்.

பொதுவாகவே நாட்டில் அறமும் நல்லொழுக்கமும் குறைந்து வருவது தெரியும்தான் என்றாலும், ஊழல் எனும் புற்று நோய் எந்த அளவுக்குப் பரவியுள்ளது என்பதற்கு இந்த பங்கு மார்க்கெட் ஊழல் விவகாரம் சாட்சியம் சொல்கிறது.

இதையெல்லாம் கட்டுப்படுத்தும் அதிகாரம் ரிஸர்வ் வங்கிக்கு இருந்தும் கூட, அது கண்களை மூடிக் கொட்டாவி விட்டுக் கொண்டிருந்திருக்கிறது என்பது அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி அளிப்பதாகும். ரிஸர்வ் வங்கியில் மட்டுமின்றி, நிதி இலாகாவிலும் பொறுப்பின்மையும் அலட்சியமும் எல்லா மட்டங்களிலும் இருந்திருக்கிறது.

இதற்கெல்லாம் யார் யார் தார்மிகப் பொறுப்பு ஏற்க வேண்டும் என்பது பற்றி மட்டும் யாரும் கவலைப்படுவதாகவே தெரியவில்லை! எல்லாமே சகஜமாக நடப்பதுதான் என்பது போல் ஒரு மெத்தனம் நிலவுகிறது. வேறு எந்த நாட்டிலாவது இப்படி ஓர் ஊழல் நடந்திருந்தால், இதற்குள் பல தலைகள் உருண்டிருக்கும். இங்கேயோ இன்னும் கொஞ்ச நாள் ஆனால், ஷேர் மார்க்கெட் ஊழல் என்று ஒன்று நடந்ததாகவே நினைவிருக்காது! 'ஹர்ஷத் மேத்தாவா, யார் அது?' என்று கூடக் கேட்பார்கள்!

இந்த ஊழலில் சில அயல்நாட்டு வங்கிகள் கூட ஈடுபட்டிருந்தன; பல நூறு கோடி ரூபாய் நஷ்டமடைந்திருக்கின்றன என்பது ஆச்சர்யமான விஷயம். பொதுவாக அயல் நாட்டு வங்கிகள் என்றால், பணத்தில் செட்டியாக இருப்பதுடன் வாடிக்கையாளருக்குச் சேவையும் சிறப்பாக இருக்கும் என்றுதான் நம்பிக் கொண்டிருக்கிறோம். அவ்வாறிருக்க இவை எப்படி ஏமாந்தன?

அயல் நாட்டு வங்கிகள், நம்நாட்டு வங்கிகள் ஆகிய அனைத்தின் செயல்பாடுகள் குறித்தும் ஆழமான ஓர் அலசல் இன்று தேவைப்படுகிறது. அவற்றை நெறிப்படுத்துவதுடன், அதன்படி நடந்து கொள்கின்றனவா என்று கண்காணிப்பதும் அவசியமாகிறது. இல்லாது போனால் மறுபடி ஒரு பங்கு மார்க்கெட் ஊழல் நிகழாது என்பதற்கு என்ன உறுதி?

பாதிக்கப்படுவது பண முதலைகள் மட்டுமல்ல; பாமர மக்களும்தான் என்ற உணர்வு தேவை.

– வி. கோபாலன்


வீடு ஒதுக்கணும்...
கலைகளை வளர்க்க
- டில்லியில்
எனக்கு வீடு
ஒதுக்கணும்...
வைஜயந்திமாலா
ஆஹா!
பலே...
பேஷ், பேஷ்!
முறையற்ற விதத்தில் அரசாங்க வீடுகளை ஆக்ரமித்துக் கொண்டவர்கள்


ராஜேஷ் கன்னா
ஏதோ, இதை வச்சிகிட்டுச் சமாளிக்கப் பாருங்க...
டில்லி மக்களவைத் தொகுதியில் வெற்றி


மற்றொரு நாடாளுமன்றத் தொகுதியில் தோல்வி
பல சட்டமன்றத் தொகுதிகளில் தோல்வி


அம்மா, தாயே... தர்மலட்சுமி! இந்த மட்டுக்கும் ஒரு காசாவது போட்டியே, புண்ணியவதி...
ராஜ்யசபைத் தேர்தல் - இ. காங்கிரசுக்கு ஓரிடம் ஒதுக்கீடு



# கல்கி



1992
ஜூன் 21
மலர் : 50
இதழ் : 47
ஆங்கீரச
ஆனி 7

## ஒரு கொத்தாரி மறைந்தார்; பல கொத்தாரிகள் மலரட்டும்!

கொத்தாரி என்பது நிச்சயம் தமிழ்ப் பெயரல்ல. ஆனால் தமிழ்நாட்டுடன், அதன் வளர்ச்சியுடன் இரண்டறக் கலந்து விட்ட ஒரு பெயர். இன்றைக்கு அறுபது ஆண்டுகளுக்கு முன் தமது பதினெட்டாவது வயதில், சென்னையில் நடந்து வந்த தமது குடும்பத் தொழிலான பங்கு மார்க்கெட் தரகர் நிறுவனத்தில் சேர்ந்தார் கொத்தாரி என்றால், அதற்குப் பல காலம் முன்னதாகவே கொத்தாரி குடும்பம் தமிழகத்தில் குடியேறி விட்டது என்று அர்த்தம். கொத்தாரி, குடும்பத் தொழிலை மேலும் விரிவுபடுத்தியதுடன், கிளை விட்டுப் படரச் செய்தார். அவர் ஆற்றலால் நூற்பு - நெசவு ஆலைகள், சர்க்கரை ஆலை, தேயிலைத் தோட்டங்கள், ரசாயன ஆலை, செயற்கை உர ஆலை என்று பல தொழில்கள் தோன்றின. நவீன எலெக்ட்ரானிக்ஸ் துறையையும் அவர் விட்டு வைக்கவில்லை!

இவற்றில் எல்லாம் பணம் சம்பாதித்தார், செல்வந்தர் ஆனார் என்பது உண்மையே. ஆனால் அதைவிட முக்கியமாகப் பார்க்க வேண்டியது, எத்தனை பேருக்கு நேர்முகமாகவும் மறைமுகமாகவும் வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தந்தார் என்பதுதான். ஈட்டிய செல்வத்தின் பெரும் பகுதியை அவர் இங்கேயே பல நற்பணிகளுக்குத்தான் பயன்படுத்தினார். அறக்கட்டளைகளை ஏற்படுத்தி, பல தர்மங்களைச் செய்தார். பள்ளிக்கூடங்களும் கல்லூரிகளும் உருவாக்கி, இளைஞர் சமுதாயத்தை மேம்படுத்தினார்.

இன்று ஒரு கொத்தாரி மறைந்து விட்டாலும் அவரது அறிவாற்றலையும் செயல்திறனையும் எண்ணிப் பார்த்து, அவரைப் போன்ற பல 'கொத்தாரி'களுக்கு நாம் வரவேற்புச் சொல்ல வேண்டும். 'மண்ணின் மைந்தர்கள்' என்பது போன்ற குறுகிய எண்ணங்களையெல்லாம் விட்டொழித்து விட்டு, இரு கரங்களையும் நீட்டி பிற மாநிலங்களில் உள்ளவர்களையும் இங்கே தொழில்கள் தொடங்க அழைக்க வேண்டும். அதற்குத் தேவையான அடிப்படை வசதிகளைச் செய்து தர வேண்டும். அப்போதுதான் வேலை வாய்ப்புக்கள் பெருக, தமிழனின் வாழ்க்கைத் தரம் உயரும்.

இன்று தமிழகத்தில் தொழில்கள் அதிகம் தொடங்கப் படாததற்கு இரண்டு முக்கிய காரணங்கள். ஒன்று, மின்சாரப் பற்றாக்குறை. மற்றது பிரீஃப்கேஸ் அரசியல். மத்திய அரசு ஒருவழியாக விழித்துக் கொண்டு கட்டுப்பாடுகளையெல்லாம் நீக்கி, லஞ்ச ஊழலைக் குறைக்க முயற்சி எடுத்தபோதிலும், அதற்கு அனுசரணையாக மாநில அரசில் முன்னேற்றமில்லை. அனுத்துச் சலித்துப் போகும் அளவுக்குக் கெடுபிடிகளும் தாமதங்களும் உள்ளன. பெட்டியை எதிர்பார்த்தே தர்பார் நடப்பதற்கு ஒரு காரணம், கட்அவுட் கலாசாரம். ஆளும் கட்சி மாநாடு என்றால், அதற்கு இத்தனை கோடி செலவு என்றால், அதைக் கட்சியே தரும் என்றால், எங்கிருந்து வருகிறது பணம்? விடை அறிய மக்களுக்கு உரிமை உண்டு. சிறிய, பெரிய தொழிலதிபர்கள், வியாபாரிகள் யாருமே விட்டு வைக்கப்படுவதில்லை.

'தொழில் தொடங்க எல்லா வசதிகளும் உண்டு; இடையூறுகள் எதுவுமே இல்லை' என்ற நிலைமை உருவாக வேண்டும். ஆனால் நடப்பது என்ன? தமிழகத் தொழிலதிபர்களே கர்நாடகாவுக்கும், ஒரிஸ்ஸாவுக்கும், குஜராத்துக்கும், ஆந்திராவுக்கும் ஏன் ஆப்பிரிக்காவுக்கும் கூட போய்க் கொண்டிருக்கிறார்கள், தொழில் தொடங்க! இங்கேயே செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்க, ஏன் போகிறார்கள்? அங்கேயெல்லாம் வசதி இருக்கிறது; வரவேற்பும் இருக்கிறது, அதனால்தான். நாமோ, ஒப்புரவு, விருந்தோம்பல் என்று திருக்குறள் அதிகாரங்களை மேடையில் முழக்கி விட்டு, மேசைக்கடியில் கைநீட்டுகிறோம்.

தமிழகத்தில் புதிய ஆட்சி மலர்ந்த போது, சிந்தனையிலும் செயல்பாட்டிலும் மாற்றமிருக்கும் என்று பலர் எதிர் பார்த்தார்கள். ஏமாற்றமே மிஞ்சியது. ஆட்சியின் இரண்டாவது ஆண்டாவது மாட்சிமை மிக்கதாக விளங்குமானால் நல்லது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

பெரியவா துணை

# ஆஸ்திக அன்பர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு!



நடமாடும் தெய்வமாய் நமக்கு நாளெல்லாம் அருள்பாலித்து வரும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர சரஸ்வதி ஸ்வாமிகள் வேதம் காட்டும் வழியே நல்வழி என்று இவ்வையகமே போற்றும் வகையில் தானே வழிகாட்டி வந்து கொண்டிருக்கிறார்கள்.

1. தர்மத்தின் மேல் பற்று - தன் தேன் சொரியும் அருள்வாக்குகளாலும்

2. எளியோருக்கு சேவை - 'பிடி அரிசி', நோயுற்றோருக்கு 'பிரசாதங்கள்' போன்ற திட்டங்களாலும்

3. வேதங்களைப் போற்றி பாதுகாத்திட - 'வேத ரக்ஷண நிதி டிரஸ்ட்' என்றும்

4. கோவில்களில் பூஜை செய்யும் எளியோரை வாழ்விக்க - 'கச்சி மூதூர் அர்ச்சகர்கள் க்ஷேமநல நிதி டிரஸ்ட்'.

என்றும் நமக்கெல்லாம் நன்மை தர ஏற்படுத்தி அவை எல்லாம் இன்று ஆல் போல் தழைத்து அருகு போல் வேர் விட்டு அருள் மழை பொழிந்து வருவது யாவரும் அறிந்ததே! அள்ள அள்ளக் குறையாத அக்ஷய நிதியாகவே மகா பெரியவா அருள் பெருகி வந்து கொண்டேயிருக்கிறது!

இப்படிப்பட்ட பரமாத்மாவை நாம் புரிந்து கொள்ள நம் சந்ததிகள் தெரிந்து கொள்ள அவர்கள் அருளாட்சி பற்றி குழந்தைப் பருவத்திலே அவர்கள் பட்டத்திற்கு வந்தது முதல் நாளை வரை நடந்துள்ள, நடந்து வருகிற நல்லவைகளை எல்லாம் சிற்பம், ஓவியம், இயல் மூலமாகத் தெரிவிக்க அருமையான மணி மண்டபம் ஒன்று காஞ்சி மாநகர் அருகில் ஓரிக்கை (ஓர் இரவு இருக்கை) என்னுமிடத்தில் எழும்ப உள்ளது. நூறாண்டு ஜயந்தி விழா காணவிருக்கும் நம் காஞ்சி மாமுனிவருக்கு அர்ப்பணமாகும் இந்த 'பெரியவா சதாப்தி மணி மண்டபம்' எழும்ப பூஜ்ய ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளும் பாலப் பெரியவா ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சங்கர விஜயேந்த்ர சரஸ்வதி ஸ்வாமிகளும் தங்களுடைய பரிபூரண அனுக்ரகத்தைத் தெரிவித்துள்ளார்கள். இப் பெரியவர்களின் ஆசிகளையே மூலதனமாகக் கொண்டு உலகெங்கிலுமுள்ள பக்தகோடிகள் தரப் போகும் சிறிய பெரிய காணிக்கைகளைக் கொண்டு இந்த 'பெரியவா சதாப்தி மணி மண்டபம்' எழும்புகிறது. அயோத்தி ராமனுக்கு அன்று உதவிய அணில் போன்று ஏழை எளியோர் எல்லோருமே இதற்குப் பொருளுதவி அளித்திட வேண்டும் என்பதே எம் அவா. கொடுத்திடும் தொகை ஒரே ரூபாயாக இருப்பினும் குருபக்தி அதற்குப் பெருமை சேர்ப்பதால், அதை உடனே தந்து உதவிட முன்வர வேண்டும் - மகா பெரியவா அருளாசியால் வாழ்வில் எல்லா நன்மங்களங்களையும் பெற இதை ஒரு அரிய வாய்ப்பாகக் கருதித் தந்திட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம். அணி அணியாய்த் திரண்டு மணியார்டரிலும் அனுப்பலாம். காசோலை, டிமாண்டு டிராப்ட் என்றும் காணிக்கைகளைக் குவித்திடலாம். வருமான வரிச் சட்டம் 80 'ஜி' பிரிவின்படி வருமான வரி விலக்கும் காணிக்கைகளுக்கு உண்டு.

''ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மகாலக்ஷ்மி மாத்ருபூதேஸ்வரர் டிரஸ்ட்'' என்ற பெயருக்கு நிதி சேர்க்கும் முகவரிகள் :-

1. 'கடம்' வித்வான் ஸ்ரீ டி. எச். விநாயகராம், 74, பிள்ளையார் கோவில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

2. ஸ்ரீ சி. ஆர். ரவிச்சந்திரன், 57, கிருஷ்ணன் கோவில் தெரு, சேலம் - 636 001.

3. ஸ்ரீ வி. ராமரத்னம், 104, துலிப்ஸ் அபார்ட்மெண்ட்ஸ், 6-3-655, சோமாஜிகுடா, ஐதராபாத் - 500 482.

*(காஞ்சி மாமுனிவரை உலகினுக்கே தந்து வான் புகழ்கொண்ட தாயார் மகாலக்ஷ்மி அவர்களுடைய திருநாமத்தோடு தானே தாயாகிக் காத்தருளிக் கொண்டிருக்கும் நம் ஈசனார் திருப்பெயரையும் இணைத்து உருவானது இந்த ''டிரஸ்ட்'').*

பொன் விழா போட்டிக் கவிதை

# மாரி பொய்த்ததடா!

- ஆர் திலகவதி



நேற்றிருந்த நீதி நேர்மை நிலைகுலைந்து விட,
நெஞ்சம் பொய்த்த வாழ்வினாலே நியதி குன்றிவிட,
வேற்றுமனிதன் வீழ்ச்சி தன்னில் வெற்றிகண்டுவிட,
வேதனைகொள் அநீதியாலே விளைவு நாசமுற,
ஆற்றல் முற்றும் அதர்மம்சூழ அகம் குறுகிவிட,
அதன்பயனாய் மனிதகுலம் தன்னை விற்றுவிட,
கூற்றம் எனக் கோணல்வழி நேர்மை கொன்றுவிட
கொற்றம்கூடத் தகுதியற்றுச் சலனமற்றுவிட,
இயற்கை அன்னைசீறி விட்டால் என்ன ஆகுமடா?
இன்று அல்ல என்றுமேதான் மாரிபொய்க்குமடா!

புரட்டுவாதம் திருட்டு வேதம் புகுந்து ஆர்ப்பரிக்க,
புனிதமான செயல்கள் முற்றும் அகன்றுவேர் பறிக்க,
சுருட்டுகின்றோர் வாழ்வுதன்னில் சுகம்மலிந்துவிட
சூதும்வாதும் சுறுசுறுப்பாய் நிதம் தெளிந்துசுட,
முரட்டுப்பண்பு சமுதாயத்தை மூடிக் கொண்டுவிட,
முழுதும் வன்முறை தலைவிரித்தாடும் மோசம் கண்டுவிட
இருட்டில் மூழ்கித் தவிக்கும் போதும் இதயம் இல்லையம்மா!
இதனைச் சொல்லும் சிலரின் கருத்து ஏற்கவில்லையம்மா!
அரசியலில் நேர்மையற்றால் அழிவு மிஞ்சுமடா!
அழிந்திடாமல் நாட்டைக்காக்க தர்மம் கெஞ்சுதடா!

பதவிக்காகப் பணத்திற்காக ஏதும் செய்வரடா!
பண்பும் அன்பும் பறந்து விட்டால் எங்கு உய்வதடா!
விதவிதமாய் மனிதகுலம் பிரிந்து விட்டதடா!
விளைவுமுற்றும் நேர் எதிராய்த் திரிந்துபட்டதடா!
நிதநிதமும் பல்வகை நாசம் நெருங்கி வந்ததடா!
நிலைகுலையும் நாடுகாண நெஞ்சம் வெந்ததடா!
எதையும் செய்ய மனிதகுலம் துணிந்து விட்டதடா!
இதற்கு அஞ்சிச் சட்டம் கூடப் பணிந்து விட்டதடா!
பன்முறைபலரும் கூறிஎந்தப் பயனும் இல்லையடா!
வன்முறையால் நாடழிந்தால் வாழ்வு எங்கேயடா?

# நிலா மயக்கம் 11

"ஃப்ராடா?'' என்று திகைப்புடன் கேட்டான் தேவராஜ். செய்தியின் தீவிரம் அவன் மூளையைத் தாக்கியது. ஷ்யாம் சுந்தரோடு புவனாவின் வாழ்க்கையும் சம்பந்தப்பட்டிருக்கிறது.

''ஆமா சார். இந்தக் கம்பெனில கொஞ்ச நாள் வேலைக்கிருந்தான். ரெப்ரசென்டேடிவ் வேலை தான். பொம்பளை டாக்டருங்களைப் போய்ப் பாத்து எக்குத்தப்பாப் பேசறான்னு ரிப்போர்ட் வந்தது. அப்புறம் செலவுக் கணக்குல ஃப்ராட் பண்ணான். கம்பெனி மருந்து, கிஃப்ட் அய்ட்டமெல்லாம் திருடுவான். கம்பெனி தாங்காதுன்னு வெளிய தொரத்தியாச்சி. அவனைத் தேடிக்கிட்டு எத்தனை பேரு வருவாங்கங்கறீங்க. இவ்வளவு பணம் குடுத்தேன்; அவ்வளவு பணம் கொடுத்தேன்னு. நீங்க எவ்வளவு ஏமாந்தீங்க?''

தேவராஜ் எவ்வளவு ஏமாந்தான் என்று தெரிந்து கொள்வதில்தான் தனக்குப் பிரியம் என்கிற மாதிரி, வெற்றிலைப் பாக்கு மறுபடி மறுபடி அதே கேள்வியுடன் உரையாடலை முடித்தது. ஏமாறக் கூடாததை ஏமாந்து விட்டேன் என்று எப்படி அவரிடம் சொல்வது என்று புரியவில்லை.

தேவராஜ் அவருக்குப் பதில் சொல்லாமல் மறுபடி குறுகிய மாடிப்படிகளில் இறங்கிக் கீழே வந்தான்.

இனி புவனாவை எங்கே என்று தேடுவது? வெயிலின் சூடு அவன் உச்சி மண்டையைத் துளை போடுகிற மாதிரி தாக்கியது. புவனா நல்ல இடத்தில்தான் போய்ச் சேர்ந்திருக்கிறாள் என்று உறுதி செய்து மனத்தின் ஓரத்தில் சின்னதாகச் சந்தோஷப்பட்டுக் கொள்ளலாம் என்று நினைத்ததில் மண். அம்மாவிடம் ரகசியமாக அவளைப் பற்றித் தெரிவித்து அவள் கவலையை, பயத்தை அகற்றலாம் என்று நினைத்ததில் சேறு.

நினைக்க நினைக்க புவனாவின் மீது கோபமாக வந்தது. சின்னப் பெண்; வயசு பத்தாது; வளர்ச்சி பத்தாது: அறிவு பத்தாது என்று அவளைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்ததையெல்லாம் நிரூபித்து விட்டாள். அம்மாவிடம் என்ன சொல்வது? நந்தினியிடம் என்ன சொல்வது? என் கோபம்தான் எல்லோரையும் சரியான வழியில் செலுத்தும் என்றெண்ணி, நந்தினியை, அம்மாவை, தாத்தாவை, பாட்டியை என்று யாரை எடுத்தாலும் கோபித்துக் கொண்டது தப்பாகப் போய் விட்டது. ஒரு பக்கம் அடைத்தால் இன்னொரு பக்கம் உடைத்து வெளியேறும் வெள்ளம் போல, புவனா உடைத்துக் கொண்டு போயிருக்கிறாள். கடலில் கலக்காமல், சாக்கடையில் கலந்து விட்டாளோ என்ற பய சந்தேகம் வேறு இப்போது முளைத்திருக்கிறது.

அவ்வளவு கோபப்பட்டிருக்கக் கூடாது. அவ்வளவு இறுக்கமாய் இருந்திருக்கக் கூடாது.

ஒரு நப்பாசையில் அன்றைய தினம் முழுக்க தேவராஜ் மெயின் கார்டு கேட், உறையூர், தில்லை நகர், ஜங்ஷன் என்று நடந்து சுற்றினான். சைக்கிளைக் காணடித்து விட்டபின், சாலையில் போகும் சைக்கிள் எல்லாம் தம்முடையது என்று ஒரு மாயத் தோற்றம் கிடைக்குமே, அதே போல்தான் அவனுக்குப் பார்க்கும் பெண்களெல்லாம் புவனாவாகத் தோன்றினார்கள்.

பஸ் ஸ்டாண்ட் அருகில் அவனைக் கையைப் பற்றி இழுக்காத குறையாக வீடியோ கோச்சில் உல்லாசமாக இந்தியாவின் எந்த மூலைக்கும் போகலாம் என்று அழைத்தார்கள். வெயிலில் கிர்ணிப் பழ ஜூஸ் ஐம்பது காசுக்கு ஆயிரம் ஈக்களுடன் அமோக விற்பனை ஆகிக் கொண்டிருந்தது. ஒரு மேம்பாலத்தின் கீழ் இருந்த நிழலில் சூதாட்டம் ஆரவாரமின்றி நடந்தது.

அவன் வெறுத்துப் போய் அம்மாவை நோக்கிப் போகலாம் என்று தீர்மானித்து, தேவராஜ் பெங்களூர் வந்து சேரும் போது தலை கலைந்திருந்தது. தூக்கமற்ற கண்கள் சிவந்திருந்தன. பெங்களூர் எப்போதும் போல் இப்போதும் சுறுசுறுப்பாக இருந்தது. தேவராஜ் ஒரு தீர்மானத்திற்கு வந்தான். கெம்பகௌடா சர்க்கிள் வரை நடந்து வந்து போஸ்ட் ஆபீஸில் நுழைந்து ஒரு இன்லண்ட் லெட்டர் வாங்கி, அதை ஓர் ஓரமாய் எடுத்துச் சென்று சரியான லாமினேட் பலகை மேல் வைத்து எழுதத் தொடங்கினான்.

'அன்புள்ள அம்மாவுக்கு...'

**அன்புள்ள அம்மாவுக்கு...**

அநேக நமஸ்காரங்களுடன் புவனேஸ்வரி எழுதிக் கொண்டது. நானும்

சுபா

மாப்பிள்ளையும் இங்கு நலம். நீங்கள் சௌக்யம் என்று நம்புகிறேன்.

நான், திடீரென்று வீட்டை விட்டுப் புறப்பட்டு வந்ததில் என்மேல் அனைவரும் கோபமாய் இருப்பீர்கள். அப்படி வீட்டை விட்டு வந்தது தப்புத்தான். எனக்கு வேறு வழி தெரியவில்லை. மாப்பிள்ளை என்னிடம் அன்பாக இருக்கிறார். நாங்கள் இருவரும் சந்தோஷமாக இருக்கிறோம்.

நீங்கள் எல்லோரும் என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். பாலும், நெய்யும், தயிருமாக நான் சாப்பிடுகிறேன். நீங்கள் எல்லோரும் உங்கள் உடம்பைப் பார்த்துக் கொள்ளுங்கள்.

நான் எங்கே இருக்கிறேன் என்று தெரிவித்தால் அண்ணன் என்னைத் தேடிப் புறப்படுவார். அதனால் என் அட்ரஸ் சொல்லவில்லை. கொஞ்ச நாள் போகட்டும். நீங்கள் எதிர்பார்க்கும் விசேஷம் ஏதாவது இருந்தால் அப்போது என் முகவரியைத் தெரிவிக்கிறேன்.

அண்ணனை என் மீது கோபப்பட வேண்டாம் என்று சொல்லுங்கள். தாத்தா பாட்டிக்கும் என் அன்பு கலந்த வணக்கங்கள்.

உங்கள் செல்ல மகள்,

புவனா.

அந்தக் கடிதத்தை அம்மா குறைந்தது பத்து முறையாவது படித்திருப்பாள். அவளைச் சுற்றி நின்ற தாத்தாவுக்கும், பாட்டிக்கும் கூட காட்டாமல், ஆர்வ முகத்துடன் காத்திருந்த நந்தினியிடமும் கொடுக்காமல், அந்தக் கடிதத்தைக் கையில் வைத்துக் கொண்டு உள்ளுக்கும் வாசலுக்கும் அலைந்து அலைந்து படித்தாள்.

தேவராஜ் ஆபீஸ் போய்விட்டு வந்து உள்ளே நுழையும் முன்பாக, ''தேவு, நம்ம புவனா கிட்டேர்ந்து லெட்டர் வந்திருக்குதடா'' என்றாள்.

தேவராஜ், ''என்னவாம்?'' என்றான் அகவாரசியமாக சட்டையைக் கழற்றிக் கொண்டே.

''மாப்பிள்ளை நல்லா வெச்சிருக்காராம். கொழந்தை சந்தோஷமா இருக்காளாம். பாலு, தயிரு, நெய்யி எல்லாம் சாப்பிடறாளாம்.''

''ஆமா. நீதான் நேர்ல போய்ப் பாத்துட்டு வந்தே''

நந்தினி சட்டையை வாங்கி மாட்டினாள்.

''பாரேன். கடிதாசியில என்ன எழுதியிருக்குதுன்னு.''

தேவராஜ் அதை அலட்சியமாக வாங்கி, அலட்சியமாகப் படித்தான். படித்து விட்டுக் கிழித்தான்.

''டேய்... தேவு.. தேவு...'' என்று அம்மா பதறினாள்.

''ஓதறிட்டு ஓடினவளுக்கு நீ இப்படிக் கெடந்து உருகிப் போறே... நல்லா இருக்காள்ல! இருக்கட்டும். என்னடா ஒரு மனுஷன் வேலைக்குப் போய்ட்டு ஆஞ்சி, ஓஞ்சி வந்திருக்கானே. அவனுக்கு டிபன் குடுப்போம். காப்பி குடுப்போம்னு தோணுதா உங்களுக்கு. லெட்டர் வந்திருக்குதாம். சந்தோஷப்பட்டுக்கறாங்களாம்'' என்று கூறி விட்டு உள்ளே சென்றான்.

அம்மா விக்கித்துப் போய் நின்றாள்.

பாத்ரூமில் நுழைந்து, கிழித்த கடிதத்தை கம்மோடில் போட்டுத் தண்ணீரைத் திறந்து விட்டான் தேவராஜ். முகம் கழுவி



வெளியே வந்தான். அவன் முகத்துச் சோகம் தண்ணீரில் அடிபட்டது. துண்டை எடுத்துத் தோள் நீரை ஒற்றி எடுத்தான்.

டைனிங் டேபிளில் உப்புமா ஆவி பறக்கக் காத்திருந்தது.

''அம்மா சாப்ட்டாங்களா?''

''இல்ல.''

''ஏன்?''.

''வேணாம்னுட்டாங்க.''

''அதான் பொண்ணு பாலு, தவிரு எல்லாம் சாப்புடுதில்ல. இங்க உப்புமா சாப்புடக்கூடாதா? அம்மா, வா. என் எதிர்ல உக்காரு. நந்தினி நீயுந்தான். தாத்தா பாட்டியைக் கூட்டிக்கிட்டு வா. எல்லோரும் சேந்து சாப்புடறதா இருந்தா நான் உப்புமா சாப்பிடறேன். இல்லைன்னா எனக்கும் எதுவும் வேணாம்.''

மெல்ல மெல்லக் குடும்பம் டைனிங் டேபிளைச் சுற்றிக் குழுமியது.

நந்தினி திரைச்சீலை வாங்க வேண்டுமென்று கெம்பகௌடா சர்க்கிளுக்கு வந்திருந்தாள். திடீரென்று வேலையில் இருந்து நின்று விட்டதால் வீடு அவளுக்குச் சிறை போல் இருந்தது. முன்பு பேச்சுத் துணைக்கு புவனா இருந்தாள். இப்போது அவளும் இல்லை. தாத்தாவுக்கும் பாட்டிக்கும் ஒருவருக்கொருவர் சீண்டிக் கொள்வதிலேயே நாட்கள் நகர்ந்தன.

தேவராஜ் இப்போது கொஞ்சம் சாந்தமாகி இருக்கிறான். அவன்தான் வீட்டை எவ்வளவு முடியுமோ அவ்வளவு அழகுபடுத்தச் சொன்னவன்.

''அப்படின்னா ஜன்னலுக்கு ஸ்க்ரீன் வாங்கி மாட்டலாமா?''

''மாட்டலாமே.''

''வரீங்களா. போய்த் துணி வாங்கிட்டு வரலாம்.''

''நான் எதுக்கு? நீ மெட்ராஸ்ல தனியா வேலைக்குப் போய்ட்டு வந்துட்டிருந்தேல்ல. இங்க பஸ்ல போ. வண்டி ஓட்டிக்கிட்டுப் போவாதே.''

கெம்பகௌடா சர்க்கிளுக்கு வந்துவிட்டாள். அவளைக் கடந்து போனவர்களில் நூற்றுக்கு ஐம்பது பேராவது தமிழில் பேசிக் கொண்டு போனார்கள். பெரும்பாலானவர்கள் டூரிஸ்டுகளாக இருந்தார்கள்.

போஸ்ட் ஆபீஸ் கண்டுபிடித்து உள்ளே நுழைந்து எஸ். டி. டி. யில் கல்யாணியை அழைத்தாள்.

''நந்தினி... எங்கேருந்து பேசறே? நல்லாயிருக்கியா?''

''நல்லாருக்கேன். எல்லாம் நல்லபடியா நடந்ததா?''

''ம்... அடுத்த நாளே ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ்ல கல்யாணம் நடந்திரிச்சி. சாட்சிக்கு நானும், அக்கவுண்ட்ஸ் செக்‌ஷன்லேர்ந்து ராம்கோபாலும், கிருஷ்ணனும் வந்திருந்தாங்க. புவனாவும், மாப்பிள்ளையும் கோவாவுக்கு ஹனிமூன் போயிருக்காங்க. நான் ஒன் பேருக்கு லெட்டர் ஒண்ணு போட்டிருக்கேன். பார்சல்னு எழுதி நேத்துத்தான் போஸ்ட் பண்ணேன்.''

''அப்படியா... ரொம்பத் தாங்க்ஸ் கல்யாணி.''

''உங்க வீட்டுக்காரருக்கு இன்னும் கோவம் இருக்குதா?''

''கொஞ்சம் அடங்கிப் போன மாதிரித்தான் தெரியறாரு! சரி நான் வெச்சிடறேன். ஏதாவது விஷயம்னா போன் பண்றேன். நீ லெட்டர் போட வேணாம். வீட்ல யார் கிட்டயாவது சிக்கிக்கிட்டா நல்லாயிருக்காது! வச்சிரட்டுமா.''

அவசர அவசரமாக தேவராஜுக்குப் பிடிக்கும்படியான நிறத்தில் திரைச் சீலைத் துணி வாங்கிக் கொண்டாள். வீட்டிற்குச் சீக்கிரம் போக வேண்டும் என்று தோன்றியது. கல்யாணியின் கடிதத்தை உடனே டெலிவரி வாங்கி விட்டால் பரவாயில்லை.

வீட்டுக்கு வந்த போது, அவளை தேவராஜே வாசலுக்கு வந்து வரவேற்றான்.

''யாரு வந்திருக்காங்க பாரு'' என்றான். அவன் குரலில் என்ன உணர்ச்சி தொனித்தது

---



"அந்தப் படம் ஆரம்பிக்கிறது தான் தெரியும்; பிறகு நாம தியேட்டர்ல சினிமா பார்க்கிறோம்கிறதே ஞாபகம் இருக்காது."

"அவ்வளவு விறுவிறுப்பா...?"

"அது யாருக்குத் தெரியும்... அதான் படம் ஆரம்பிச்சதுமே எல்லாரும் அசந்து தூங்கிடறாங்களே...!"

- சீர்காழி வி. ரேவதி

என்று அவளால் இனம் காண முடிய வில்லை.

உள்ளே நுழைந்தாள்.

வரவேற்பறையில் அருண்குமார் உட்கார்ந்திருந்தான். அவளைக் கண்டதும் எழுந்து பெங்களூர் பாணியில் ''நமஸ்காரா'' என்றான்.

இவன் எங்கே இங்கே வந்தான்?

''என்ன நந்தினி? அடையாளம் தெரியாத மாதிரி பாக்கறே? நம்ம அருண்குமார்.''

''வாங்க'' என்றாள் நந்தினி.

போஸ்ட்மேன் வந்து போய் விட்டானா? தேவராஜ் எப்படி இவ்வளவு சீக்கிரம் வீட்டுக்கு வந்தான்? அருண்குமாருக்கு எப்படி இந்த அட்ரஸ் தெரிந்தது?

''சாரைக் கங்கிராஜுலேட் பண்ணு நந்தினி.''

''என்ன விஷயம்?'' என்று கேட்டாள் நந்தினி சிறு புன்னகையுடன்.

''டைரக்‌ஷன் சான்ஸ் கெடைச்சிருக்குங்க. சத்ய சித்ரா மூவிஸ். பெரிய கம்பெனி. நல்ல படங்களைக் குடுக்கற கம்பெனின்னு இண்டஸ்ட்ரியில பேரு.''

''கங்கிராஜுலேஷன்ஸ்'' என்றாள் நந்தினி நிஜமான சந்தோஷத்துடன்.

''நீதான் அவரோட மொத படத்துக்கு காஸ்ட்யூம் டிசைன் பண்ணணுமாம். ஒன்னைத் தேடி ஒன் கம்பெனி போயிருக்காரு. அங்க நம்ப பெங்களூர் அட்ரஸ் குடுத்திருக்காங்க. ஒடனே ரயிலேறி பெங்களூர் வந்து என்னை ஆபீஸ்ல பாத்தாரு. அவரு டைரக்டர் படத்துக்கெல்லாம் நீ தான் காஸ்ட்யூம் டிசைன் பண்ணியிருக்கியாமே. அந்த படமெல்லாம் நூறு நாள் படமாம். அதனால செண்டிமெண்ட்டலா நீதான் பண்ணணும்னு...''

''நான் பெங்களூர்ல இருக்கேன். மெட்ராஸ்ல இருந்தாலாவது ஏதாவது பண்ணலாம்.''

''அடப்போ நந்தனி. நீ மெட்ராஸ்ல இருந்தா என்ன, பெங்களூர்ல இருந்தா என்ன. டிசைன்தானே பண்ணப் போறே... சினிமா ஃபீல்ட்னாலே செண்டிமெண்ட் தானே. பண்ணிக் குடேன்!'' என்றான் தேவராஜ்.

''என்னால முடியாதுங்க'' என்று மறுத்தாள் நந்தினி உறுதியாக.

''போஸ்ட். மிஸஸ் நந்தினி தேவராஜ்.''

''நீ யோசிச்சுப் பேசு நந்தினி. யோசிக்காம பட்னு பேசாதே. நான் போய் தபாலை வாங்கிட்டு வரேன்'' என்று வாசல் பார்த்து நடந்தான் தேவராஜ்.

(தொடரும்)

# மாம்பழ மயக்கம்

பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள தங்க நகைப் பரிசு பெறுபவர்:

– கே. சிவப்பிரகாசம்,
நேர்வு நிலை உதவியாளர்,
மாவட்டக் கல்வி அலுவலகம்,
விருத்தாசலம் – 606 001.

## ராஜாஜியை மயக்கிய மாம்பழம்!

**மா**ம்பழம் என்றதுமே, சுதந்திரப் போராட்டத் தியாகியான என் பெரியப்பா சொன்ன சம்பவம்தான் நினைவுக்கு வருகிறது.



ஒருமுறை என் பெரியப்பாவையும் அழைத்துக்கொண்டு ராஜாஜி அவர்களைப் பார்ப்பதற்காகக் குமாரசாமி ராஜா சென்றாராம். ராஜாவுக்கு மாம்பழங்கள் என்றால் ரொம்பப் பிரியம். ஆனால், மூதறிஞர் ராஜாஜியோ உணவு நேரம் தவிர, மற்ற நேரத்தில் எதுவும் சாப்பிட மாட்டார். அவ்வளவு கட்டுப்பாடானவர். அப்படிப்பட்ட மூதறிஞரே, குமாரசாமி ராஜா கொண்டு சென்ற இராஜபாளையம் சப்பட்டை, பங்கன பள்ளி போன்ற நல்ல ரக மாம்பழங்களைக் கண்டதும் அவற்றில் சிலவற்றைத் துண்டங்களாக்கிக் கொண்டு வரச் செய்து, அனைவருக்கும் கொடுத்ததோடு தாமும் சுவைத்து மகிழ்ந்தாராம்.

உணவு விஷயத்தில் மிகவும் கட்டுப்பாடான ராஜாஜி அவர்களையே மாம்பழங்கள் மயக்கின என்றால், இதை விடவும் மாம்பழங்களுக்கு வேறு என்ன தகுதி வேண்டும்?

- கே. சிவப்பிரகாசம், விருத்தாசலம்.

## எத்தனை மயக்கம்!

**மா** அம்பலத்தில்
ஆடியவர்
மாம்பலம் தராததால்,
மால் முருகன் கோபம்
பந்தபாச மயக்கம்!
மா பலமுள்ள விஜயன்,
மாதைப் பழமென்று சொன்னதால்
ஐவருக்கும் தேவியானதெல்லாம்
தாய்ப்பாச மயக்கம்!
மாம்பூவிலே தேனுண்டு
கோமாவிலே கிடந்து - பின்
எழுந்த வண்டுக்கு
மாம்பழ மயக்கம்!

- சண்முகநாதன், திருச்சி.

## மறக்க முடியாத தலைப்பாகை மனிதர்!

**அ**து 1944-ம் ஆண்டு. நெல்லை இந்துக் கல்லூரியில் இண்டர் படித்துக் கொண்டிருந்த நாங்கள், குற்றாலம் சென்று நீராடிவிட்டு, செங்கோட்டை ரயிலடிக்கு வந்தோம். ஈரத் துணிகளைக் கம்பி வேலியில் உலர்த்தி விட்டு, திருவனந்தபுரத்திலிருந்து சென்னைக்குச் செல்லும் மெயிலை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தோம். கலைந்த தலையும் அரை நிஜாருமாக நின்றிருந்த என்னைக் கூலிக்காரப் பையன் என்று நினைத்து, முதல் வகுப்புப் பெட்டியிலிருந்த தலைப்பாகை



மனிதர் அழைத்தார். பிளாஸ்க்கைக் கொடுத்து வெந்நீர் வாங்கி வரச் சொன்னார். நானும் வாங்கிச் சென்று கொடுத்த போது, எனக்குக் கூலியாக ஓரணா தந்தார். நான் கூலி அல்ல; இண்டர்மீடியட் மாணவன் என்று சொன்னதும், தமது செயலுக்கு மிகவும் வருந்தி, ஒரு கிலோக்கு மாம் பழத்தைத் தந்து உபசரித்தார்.

ரயில் போன பிறகுதான் அந்தத் தலைப் பாகை மனிதர்தாம் உலகப் பிரசித்தி பெற்ற விஞ்ஞானியான சர். சி. வி. ராமன் என்பது எனக்குத் தெரியவந்தது!

- ஜி. எஸ். பாலகிருஷ்ணன்,
சென்னை - 41.

## மயக்கம் தா, மாம்பழமே!

சுற்றறிந்தோர் மனம்போலக்
'கனி'யாக இருப்பதனால்
சுற்றி வந்து உன்னைத்தான்
சுவைத்திடவே விரும்புகின்றார்



நற்றமிழின் சுவைபோல
இனிப்பாக இருப்பதனால்
மற்றெந்தக் கனியை விட
மாம்பழத்தை முன்வைத்தார்
முற்றாகத் துறந்துவிட்டு
முருகன்தான் பழனிக்கு
சற்றேனும் குறையாத
கோபமுடன் சென்றமர
வற்றாத கடல்போல
மனங்கொண்ட கணபதிதன்
பொற்கரத்தில் உனையேந்திப்
பொலிவுடனே காட்சி தந்தார்
உற்சாகம் மிகக் கொண்டு
உனைவாழ்த்திப் பாடுகிறேன்
நற்சாறாய் வந்தெனக்கு
மாம்பழத்தின் மயக்கம் தா!

- ச. அருட்செல்வன், புவனகிரி.

## சில புள்ளி விவரங்கள்!

ஓர் அவுன்ஸ் மாம்பழத்தில் வைட்டமின் 'ஏ' மட்டும் 1363 மி. கிராம் அடங்கியுள்ளது. இதுவன்றி வைட்டமின் 'பி' 11 மி.கிராமும், வைட்டமின் 'பி-2' 14 மி. கிராமும் வைட்டமின் 'சி' 4 மி. கிராமும் அடங்கியுள்ளன.

- ஏ. ஜீவானந்தன், எலப்பாக்கம்.

## ஓ, மாம்பழமே!

ஓ மாம்பழமே!
நீயும் எங்கள்
அரசியல்வாதியும்
ஒன்றுதான்!
நீ வருவது
மாம்பழ சீசனுக்கு
மட்டும்.
அவர் வருவது
தேர்தல் சீசனுக்கு
மட்டும்.
- எம். குருமூர்த்தி, எட்டயபுரம்.

## "இனிச்சாக் காசு கொடுங்க!"




மாம்பழக் கடைக்காரர் : சார், மாம்பழத்தைச் சாப்பிட்டுப் பாருங்க! இனிச்சாக் காசு கொடுங்க; புளிச்சாக் காசு கொடுக்க வேண்டாம்!

வாங்க வந்தவர் (மாம்பழத்தைச் சாப்பிட்டுக் கொண்டே) : இந்தப் பழம் புளிக்குது. இந்த மாதிரி பழமா ஒரு டஜன் பழம் கொடுப்பா!

- தேனம்மாள் ராமசாமி,
ஸ்ரீவில்லிபுத்தூர்.




# ஊர்வலம்

நிமிடத்திற்கு ஒரு போலீஸ் ஜீப் புழுதி பறக்க விரைவதைச் சாரதா ஆச்சரியமாகப் பார்த்தாள். நான்கு நாட்களாக இப்படித் தான் இருக்கிறது. எவ்வளவு போலீஸ் வேன்கள்? ஜீப்புகள்? கட்சிக் கொடியைப் பறக்க விட்டுக் கொண்டு, முதல்வரின் வருகையை அறிவித்தபடி கார்கள் பறக்கின்றன. எப்போதும் ஒருவிதப் பரபரப்பில் சாலை. நேற்று மதியம் தூங்கிக் கொண்டிருந்த போது, கதவைக் கூட தட்டாமல், நான்கு போலீஸ்காரர்கள் வீட்டிற்குள் நுழைந்தார்கள். ரேஷன் கார்டை எடுக்கச் சொல்லி, அதில் உள்ள பெயர்களையெல்லாம் படித்து, யார் யார் வீட்டில் இருக்கிறார்கள் என்று விசாரித்தார்கள். புதிதாக யாராவது விருந்தாளிகள் வந்தால் போலீஸில் தகவல் தெரிவிக்க வேண்டும் என்றார்கள். "ஏன்?" என்ற போது "இந்த வழியே முதல்வர் நாகை செல்கிறார்... தெரியாதா உங்களுக்கு?" என்றார்கள் கடுங்குரலில்.

சாரதா மதியம் தன் வீட்டைக் கடந்து செல்லும் முதல்வரைப் பார்ப்பதற்கு ஆவலாக இருந்தாள். சாலையின் இருமருங்கிலும் மூன்று மணிக்கு வரப்போகும் முதல்வரைப் பார்க்க இப்போதிலிருந்தே கூட்டம் சேர ஆரம்பித்திருந்தது. இரும்புத் தொப்பி அணிந்த போலீஸ்காரர்கள் கணிசமான அளவு நின்றிருந்தார்கள்.

ஜன்னலை விட்டு விலகி, அடுப்படிக்குள் நுழைந்த போது, செல்வி சோர்வாக வெறுந்தரையில் படுத்திருப்பது தெரிய, அருகே அமர்ந்து, "ஏண்டி ஒருமாதிரியா இருக்கே?" என்றாள். நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள்.

செல்வி கீழுதட்டைக் கடித்தபடி, "வலிக்குதும்மா" என்றாள் கைகளால் இடுப்பைத் தாங்கிக் கொண்டு.

சாரதாவுக்கு பக்கென்றது. அடுத்த மாதம் மூன்றாம் தேதிதானே டாக்டரம்மா குறித்துக் கொடுத்திருக்கிறாள்... இன்னும் பத்து நாட்கள் இருக்கிறதே... அதற்குள்... சாரதா கவலையாக மகளைப் பார்த்துக் கொண்டிருந்தபோதே, செல்வி துடிக்க ஆரம்பித்தாள். ''செத்த பொறுத்துக்கோடி... செரிமானம் இல்லாம வலிக்குதுன்னு நினைக்கிறேன்...'' என்றவள், இஞ்சியை அரைத்துக் கஷாயம் காய்ச்சிக் கொடுத்தாள். குடித்தும் வலி நிற்காமல் போகவே, பக்கத்து வீட்டுப் பையனை அழைத்து, கடையில் இருக்கும் கணவனுக்குச் செய்தி அனுப்பினாள். பத்தாவது நிமிடம், ராமநாதன் வாடகைக் காருடன் விரைந்து வந்தார்.

அந்த தனியார் ஆஸ்பத்திரியில் செல்வியைச் சோதித்த டாக்டரம்மா புருவம் உயர்த்தினாள். வயிற்றை அழுத்திக் குழந்தையின் பொஸிஷன் பார்த்தவள் குழம்பினாள். உடனே ஸ்கேன் பார்க்கக் கொண்டு போகச் சொன்னாள். பத்து நிமிடம், டாக்டரம்மா ராமநாதனைத் தன் அறைக்கு அழைத்தாள். தவிப்பாக அமர்ந்திருந்தவரிடம் சொன்னாள் : ''தொப்புள் கொடி குழந்தை கழுத்தைச் சுத்தியிருக்கு...''

''டாக்டர்.''

''பதறாதீங்க.. இந்த நிமிஷம் ஒண்ணும் ஆபத்து இல்லை. பட்... உடனே சிசேரியன் பண்ணிக் குழந்தையை எடுத்தாகணும்.. கொஞ்சம் காம்பளிகேட்ட் ஆபரேஷன்.. சிக்கலானாலும் கூட... .நீங்க உடனே தஞ்சாவூர் கொண்டு போங்க...''

''என்ன டாக்டர் சொல்றீங்க... நான் உங்களைத்தானே நம்பி இருந்தேன்?''

''அதுக்குத்தான் சொல்றேன்... என்னை நம்பி இருந்தவங்களை மோசம் செய்யக் கூடாது இல்ல... எவ்வளவோ சிசேரியன் பண்றேன்.. பட் இது வேற.. குழந்தையை உயிரோட வெளிய எடுக்கிறது முக்கியம். நான் உங்களைப் பயமுறுத்த விரும்பல. டயத்தை வேஸ்ட் பண்ணாதீங்க. நான் ஏ. கே. சி. நர்சிங்ஹோமுக்கு போன்ல சொல்லிடறேன். அவுங்க தயாரா இருப்பாங்க. டாக்டர் சங்கமித்ரா.. எ ஜீனியஸ் சர்ஜன்.. என்னோட சீஃப். போங்க.. டாக்ஸியில உட்கார வச்சே அழைச்சிக்கிட்டு போங்க...''

''சரி டாக்டர்'' ராமநாதன் கனத்த இதயத்தோடு வெளியே வந்தார்.

சாரதா விஷயமறிந்து அழுதாள். உலகத்தில் உள்ள கடவுள்களையெல்லாம் வேண்டிக் கொண்டு டாக்ஸியில் செல்வியை ஏற்றிக் கொண்டு கிளம்பினார்கள்.

டாக்ஸி நகரத்தின் எல்லையைத் தாண்டியதுமே போலீஸ் ஜீப் மறைத்தது.

''எங்கய்யா போற...?''

''தஞ்சாவூருக்கு ஸார்... பிரசவ கேஸ்..''

இன்ஸ்பெக்டர் காரினுள் எட்டிப் பார்த்தார். டிரைவிங் லைசென்ஸை காட்டச் சொல்லிப் பார்த்தார். நம்பரைக் குறித்துக் கொண்டு, ''ஒரு மணி நேரத்துல தஞ்சாவூர் போயிடணும்'' என்றார்.

''ஏன் ஸார்...?'' ராமநாதன் கேட்டார்.

''சி. எம். வர்றாங்க.. தெரியாதா... போய்யா வேகமா.''

அறுபது கிலோ மீட்டர். ஒரு மணி நேரம். முடியுமா...? டிரைவர் ஆக்ஸிலேட்டரை மிதித்தார்.

கார் நகர்ந்ததும், இன்ஸ்பெக்டரின் கையிலிருந்த ஒயர்லெஸ் சிணுங்க ''எஸ்...'' என்ற இன்ஸ்பெக்டர் படபடப்பானார்.

''என்ன ஸார்...?'' எஸ். ஐ. கேட்க, ''சி. எம். தஞ்சாவூர்லேந்து கிளம்பிட்டாங்களாம். டிராஃபிக்கை குளோஸ் பண்ணச் சொல்றாங்க...'' என்றவர், ஒயர்லெஸ்ஸில் சற்று முன் சென்ற கார் விவரத்தைச் சொல்லி, கொரடாச்சேரியில் அதை மடக்கச் சொன்னார்.

கார் கொரடாச்சேரியில் நுழைந்தபோது, நடுரோட்டில் நின்று கொண்டு போலீஸ் கையை ஆட்டி காரை நிறுத்தச் சொன்னது.

''ஸார்... பிரசவ கேஸ்... எமர்ஜென்சி... உடனே ஹாஸ்பிடல்ல சேர்த்தாகணும். தயவுசெஞ்சு காரை விடுங்க...'' ராமநாதன் கெஞ்ச, அந்த இன்ஸ்பெக்டர் பரிதாபப்பட்டு ஒயர்லெஸ்ஸில் யாருடனோ பேசினார். பிறகு போகச் சொன்னார். கார் சீறியது.

ராமநாதன் தவித்தார். என்ன இது? இத்தனை இடைஞ்சல்... முதல்வர் வந்தால் என்ன...? இவ்வளவு அகலமான சாலையில் இன்னொரு கார் செல்ல முடியாதா என்ன...? தஞ்சாவூர் செல்வதற்குள் இன்னும் எத்தனை தடைகள்..? சாரதா உணர்விழந்திருந்த மகளின் தலையைக் கோதிக் கொண்டு, மெல்ல விசும்பிக் கொண்டு அமர்ந்திருந்தாள்.

கார் நீடாமங்கலத்தை நெருங்கிய போது, எதிரே படுவேகமாக சைரனை ஒலிக்க விட்டுக் கொண்டு வந்த அட்வான்ஸ் பைலட் ஜீப் கிரீச் என்று காரின் எதிரே பிரேக்கிட்டு நின்றது. தபதபவென்று குதித்த போலீஸ் அதிகாரி.. ''எங்கேயிருந்து வர்ற.. யார் போகச் சொன்னா உன்னை.. காரை ஓரங்கட்டுடா...'' என்று சொல்லி விட்டு என்ன ஏது என்று கூட விசாரிக்காமல் ஜீப்பில் ஏறிப் பறக்க.. டிரைவர் என்ன செய்வது என்று தெரியாமல் விழித்தார்.

உணர்வு திரும்பிய செல்வி, வலி தாங்க முடியாமல் அலற, சாரதா மகளின் அழு

**திருவாரூர் பாபு**

கையைக் கண்டு துடித்தாள். ''ஐயனாரே... எம் பொண்ணைக் காப்பாத்துப்பா...'' மனம் உருக வேண்டினாள்.

''என்ன ஆனாலும் பரவாயில் லைப்பா... பொம்பள கஷ்டம் பொம்ப ளைக்குத் தெரியும்... அந்தம்மாகிட்டேயே சொல்லுவோம்... எடுப்பா காரை...'' என்ற போது பைலட் கார் சீறிக் கொண்டு வர, காருக்கு பின்னே ஜீப்பில் கறுப்புப் பூனைகள் செல்ல... அதனையடுத்த ஏ. சி. கண்டெசாவில் சிரித்த முகமாக முதல்வர்.

கார் தாண்டிச் செல்ல...

அதுதான் முதல்வர் சென்று விட் டாரே... இனி போய் விடலாம் என்ற ராம நாதன் நம்பிக்கையில் மண் விழுந்தது. பின்னே... பின்னே... என்று ஒழுங்கில்லா மல் ஒன்றையொன்று முந்திக் கொண்டு கார்கள் செல்ல, இன்னொரு கார் எதிர்த்துச் செல்ல முடியாது என்று புரிந்தது.

நிமிடங்கள் கரைய...

''ஐயைய்யோ.. இங்க பாருங்க...'' சாரதா அலற... ராமநாதன் படபடப்பாய்ப் பார்க்க... செல்வியின் கருவிழி மேலே செருகியிருந்தது.

இதோ முடிந்து விடும்.. முடிந்து விடும் என்று எதிர்பார்த்திருக்க... முடியவில்லை. இடைவெளி விட்டு விட்டு கார்கள் வந்து கொண்டேயிருந்தன. டிரைவர் துணிந்து போய் விடலாம் என்ற நம்பிக்கையில் காரை கிளப்பி, லாவகமாகப் புகுந்து புகுந்து சென்றார். ஆனாலும் வேகமாய்ச் செல்ல முடியவில்லை. மடியில் சாய்ந் திருந்த செல்வியைப் பார்த்துச் சாரதா சத்த மாக அழத் தொடங்கினாள். ராமநாதன் அழுகையை மென்றாலும் கண்களிலிருந்து கண்ணீர் தன்னிச்சையாக இறங்கியது. டிரைவருக்குத் து க் க ம் நெஞ்சை அடைத்தது. தன் தங்கை பிரசவத்தில் இறந் தது நினைவுக்கு வந்தது. எப்படியாவது இந்தப் பெண்ணைக் காப்பாற்ற வேண்டும் என்பது சவாலாக அவரை உசுப்ப, ஆக்ஸி லேட்டரை அழுத்தினார். கார் சீறியது.

நீடாமங்கம் தாண்டி, அம்மாப் பேட்டை கடந்து, சாலியமங்கலத்தில் நுழைந்த போது, ''ஹா... ஹா...'' என்று செல்வி பெரிதாகச் சிறிது நேரம் மூச்சிரைத்து விட்டு இறந்து போனாள்.

''ஐயைய்யோ...'' அலறியபடி சாரதா மயக்கமாகிச் சரிந்தாள். டிரைவர் காரை சாலையோரமாக நிறுத்தினார்.

கூட்டமாக நின்று கொண்டு கார்கள் செல்வதை வேடிக்கை பார்த்துக் கொண் டிருந்த சிறுவர்கள் ''ஆயிரம் கார் டோய்'' என்றார்கள் கடைசியாகக் கடந்து சென்ற காரை பார்த்து!

# அரைமணி நேரம் செலவிடத் தயாரா?

00-30

**ஆம்... உங்களது முன்னேற்றத்திற்காக, தினசரி அரைமணி நேரம் செலவிடத் தயாராக இருக்கிறீர்களா? அப்படியானால் மேற்கொண்டு படியுங்கள்!...**

★ **வா**ழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற விருப்பம் உடையவரா நீங்கள்?

★ ஆங்கில மொழியில் போதிய புலமையின்மை உங்களது முன்னேற்றத்திற்கு ஒரு தடையாக இருக்கிறதா?

★ பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசும் ஆற்றல் பெற முடியவில்லையே என்று வருத்தப்படுகிறீர்களா?

★ கவலையை விடுங்கள்... நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை அடைய உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் ஒதுக்கினால் போதும்!

ஆம். இந்த அரைமணி நேரத்தில் நீங்கள் தினசரி மேற்கொள்ள வேண்டிய பயிற்சியினை மிகவும் எளிய முறையில் சொல்லித் தந்து, நீங்கள் தயக்கமின்றி ஆங்கிலத்தில் உரையாட தபால் மூலம் மிகச் சிறந்த முறையில் பயிற்சி அளிக்கிறோம்.

எனவே, ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும், இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்பயிற்சியின் மூலம் நிச்சயம் நிறைவேறும்.

என்ன? பயிற்சிக்காக தினசரி அரை மணி நேரம் செலவிடத் தீர்மானித்து விட்டீர்களா?

அப்படியானால், உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சியாக ஒரு ஐந்து நிமிடம் செலவு செய்து ஒரு போஸ்ட் கார்டில் "நான் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்" என்று எழுதி, .

---

**விவேகானந்தா கல்வி நிலையம்,**
**9, நடேசன் தெரு, தி.நகர்,**
**சென்னை 600 017.**

---

என்ற முகவரிக்கு இன்றே அனுப்புங்கள் பயிற்சி பற்றிய விவரங்களை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கிறோம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

NAGA

# சோயா சிறுநீரகத்தைப் பாதிக்குமா?

● என். கே. ஈசுவரி, பெங்களூர் - 10.

சிலருக்குத் தி ம... ரென்று மூக்கிலிருந்து ரத்தம் கொட்டுகிறதே - ஏன்? அதை, சின்ன மூக்கு உடைந்தது என்பார்கள். அது நோயா? அல்லது வேறு ஏதாவதா?

டாக்டர். வ. நம்பி, சென்னை - 4.

●● பெரும்பாலும், காரணம் எதுவும் இல்லாமலே மூக்கிலிருந்து ரத்தம் வரலாம். குழந்தைகளைப் பொறுத்தவரை, பொதுவாக, அடிபட்ட பிறகும், அல்லது விரலை மூக்கில் விட்டுக் குடையும் போதும், ரத்தம் வரலாம். சில சமயம், காய்ச்சல் அதிகம் இருந்தால் கூட மூக்கிலிருந்து ரத்தம் வரும். வெகு அபூர்வமாக, மூக்கில் ஏதேனும் கட்டி இருந்தால், அது உடைந்தும் வரலாம். இது நோய்க்கு அறிகுறிதானே தவிர, இதுவே நோய் அல்ல.

● என். முருகேஷ், பெருஞ்சேரி.

முன்னோர்கள் செய்த பாவ காரியங்கள்தான், குழந்தைகள் உடல் ஊனமாகப் பிறப்பதற்குக் காரணம் என்கிறார்களே, இது உண் மையா?

●● நிச்சயமாக உண்மை அல்ல. சில நோய்கள் மட்டும் பரம்பரையாக வரும்; அவ்வளவுதான்.

● பூ. இரா. சசிராஜ்குமார், மகுடஞ்சாவடி.

சக்தி சோயா புதிதாக வெளியிட்டிருக்கும் 'விகர்'-ஐத் தொடர்ந்து சாப்பிட்டால் உடல்நலக்கேடு ஏதாவது ஏற்படுமா? தொடர்ந்து சோயாவைச் சேர்த்தால் சிறுநீரகத்துக்குப் பாதிப்பு உண்டாகும் என்று ஒரு புத்தகத்தில் நான் படித்த ஞாபகம். இது உண்மையா?

●● சிறுநீரக நோய்கள் இருப்பவர்கள், சோயா போன்ற புரதத்தை அதிகம் சேர்க்கலாகாது. ஆனால் சோயா புரோட்டினால் சிறுநீரக நோய் வருவது கிடையாது.

● அ. ஷண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.

எழுத முடியாமல் மணிக்கட்டிலும், விரல்களிலும் ஏற்படும் பிடிப்பு (wirter's cramp) உடல் சார்ந்த நோய் அல்ல; அது ஒரு மனோ வியாதியே என்பது உண்மையா? அது எதனால் ஏற்படுகிறது? அதற்குச் சிகிச்சை என்ன?

●● ஆம், இது பெரும்பாலும் மன நோய் சம்பந்தப்பட்டதுதான். இதற்கு டென்ஷன்தான் காரணம். இந்த டென்ஷனைத் தவிர்க்க மனதுக்கும், தசைகளுக்கும் தேவையான ஓய்வு கொடுத்தால் போதும். எளிதாகச் சொல்லுவதானால் பதற்றமில்லாமல் இருக்கலாம்.




● ராக்பெல்லர், சென்னை - 83.

நான் எக்ஸ்போர்ட் கம்பெனியில் டெய்லராக வேலை செய்கிறேன். கரென்ட் மெஷினில் தைப்பதால் உடலில் சூடு அதிகம் ஏற்பட்டுக் கோளாறு வரும் என்கிறார்களே, உண்மையா?

●● நிச்சயமாக இல்லை. உடம்பில் சூடு ஏற்படுவது அறையின் வெப்பத்தைப் பொறுத்தது. எலக்ட்ரிக் தையல் இயந்திரத்தால் அல்ல. பாய்லர் போன்ற உஷ்ணமான கருவி அல்லது இயந்திரங்களில் வேலை செய்தால் உடலில் சூடு வர வாய்ப்பு உண்டு.

தொகுப்பு : எஸ். வி. என்.

# கௌரி மனோகரி

பதினைந்து வருடத்திற்கு முன்பென்றால் 'அபூர்வ ராகங்கள்' - என்கிற தலைப்பு, இப்போது வைக்கப்பட்டால் கௌரி மனோகரியா?

விவரம்.

புதிதாய் ஊருக்கு வரும் வித்துவான் பூர்ணம் விசுவநாதனுக்கு ஓர் அழகான பெண். பக்கத்து வீட்டில் பார்க்கச் சுமாராய் ஒரு வாலிபன். மனம் மனதைத் துரத்திப் புரியும் அந்தக் காதல் நிராகரிக்கப்படுகிறது. ஒரு கோபமான தருணத்தில் கதாநாயகியின் பழைய கல்யாண வாழ்க்கை புரிய வருகிறது. விவாகரத்து ஆன பெண். எப்படி, எப்படி என்று ப்ளாஷ்பேக்குகள். புதிய ஒருதலைக் காதலன் அவளுக்கு யதார்த்தம் உணர்த்தி, மனம் மாற்றி, கல்யாணச் சம்மதம் பெறுகிறான். கட் செய்தால் திடீர் பிரவேசமாய் கதையில் பழைய கணவனின் மனம் திருந்திய வருகை. பிரச்னைகள், சம்பவங்கள். மாறுதலான, வித்தியாசமான முடிவு.

இதுதான் நூற்று முப்பத்தேழு நிமிஷ கதையின் nutshell.

மூச்சூடும் தஞ்சாவூர், திருவையாறு என்று படமாக்கி இருக்கிறவர்கள் ஒப்புக்காவது காவேரியைக் காட்டியிருக்கக்கூடாதா? ஆனால் கோவில் பிராகாரங்கள் பார்வைக்கு ஆறுதல்.

ஏராள அறிமுகங்கள். கர்நாடக சங்கீதப் பாடகியாக பாவனை, சோகத்தில் மூக்குச் சுளிப்பு எனக் கதாநாயகி, புதுமுகம் சந்திரிகா தேறி விடுகிறார். கதாநாயகன் மனோ சந்தர். சித்தப்பா, ஸாடிஸ்ட் கணவனாக தன் லெவல் பெஸ்ட் செய்திருக்கும் டைரக்டர் கிருஷ்ணகுமார் என்று அடுக்கினாலும்... நடிப்பில் பூர்ணம் பூர்ணம் தான். உரக்கச் சொல்ல வேண்டிய மற்றொரு அம்சம் : இசையமைப்பு!

கதையையும், கர்நாடக சங்கீதப் பாத்திரங்களையும் புரிந்து எழுதின வைரமுத்துவின் பாடல்கள், சூழ்நிலை புரிந்து, கதைக்கு அவசியமாய் சிம்மேந்திர மத்திமம், தன்யாசி, சுத்ததன்யாசி, ஸ்ரீரவாணி ராகங்களில் புதிய இசையமைப்பாளர் இனியவனின் ஜனரஞ்சகமான மெட்டுகள் இரண்டும் கைகோத்து வருகின்றன : சுருதி பிசகாமல் பயணப்படும் இரட்டைக் குதிரை சாரட் : புதிய நல்வரவு!

ஆபாசம் இல்லை, வன்முறை இல்லை என்றாலும் படம் நெடுக ஒரு நாடகத்தன்மையே தென்படுகிறது.

- சுந்தர்ஜி



# சிவகாமியின் சபதம்

## ஒன்பதாம் அத்தியாயம்
## யுத்த பேரிகை

''தேவி! இந்தப் புராதன பல்லவ சிம்மாசனம் உன்னைப் போன்ற உத்தமியைத் தனக்கு உரியவளாகப் பெறுவதற்கு எத்தனையோ காலம் தவம் செய்திருக்க வேண்டும்! உன்னைப் பட்டமகிஷியாகப் பெறுவதற்கு நான் எவ்வளவோ ஜன்மங்களில் பாக்கியம் செய்திருக்க வேண்டும்!'' என்று மாமல்ல சக்கரவர்த்தி கூறிய போது, அவரது வயிரம் பாய்ந்த கம்பீரக் குரலும் தழுதழுத்தது. வானமாதேவிக்கோ புளகாங்கிதம் உண்டாயிற்று. ஏதேதோ சொல்ல வேண்டுமென்று தேவி பிரயத்தனப்பட்டாள். ஆனால், வார்த்தைகள் வெளிவரவில்லை. பல்லவேந்திரர் மேலும் கூறினார் :

''பாண்டியர் குலவிளக்கே! கேள்! நீ என்னுடைய பட்டமகிஷி மட்டுமல்ல. எனக்குப் பிறகு இச் சிம்மாசனத்திற்குரிய மகேந்திர குமாரனுடைய அன்னை. பல்லவ சாம்ராஜ்யத்துப் பிரஜைகளையெல்லாம் ஒரு நாளிலே ஒரு நொடியிலே வசீகரித்து, அவர்களுடைய பக்தியைக் கொள்ளை கொண்ட சக்கரவர்த்தினி. என் தந்தை மகேந்திரர் காலமான சில நாளைக்குப் பிறகு, மந்திரி மண்டலத்தார் எனக்குப் பட்டாபிஷேகம் செய்து, பல்லவ சிம்மாசனத்தில் அமர்த்தினார்கள். அதே சிம்மாசனத்தில் என் அருகில் நீயும் வீற்றிருந்தாய். நம்பிருவருக்கும் ஆசி கூறிய எங்கள் குலகுரு ருத்ராச்சாரியார் நாம் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் காட்சியானது, சொர்க்கலோகத்துத் தேவ சபையில் தேவேந்திரனும் இந்திராணியும் கொலு வீற்றிருப்பதைப் போல் இருக்கிறது என்று ஆசி கூறினார். அதைக் கேட்ட சபையோர் குதூகலத்துடன் ஆரவாரித்து மகிழ்ந்தார்கள். கொஞ்ச காலம் நாட்டில் மழை பெய்யாமலிருந்ததையும், நீ காஞ்சி நகர் புகுந்ததும் பெருமழை பெய்ததையும் நினைவுகூர்ந்த சபையோர், நீ சாக்ஷாத் இந்திராணியேதான், சந்தேகமில்லை என்று ஒருமுகமாகக் கூறினார்கள். செந்தமிழ்ப் புலவர்கள் உனக்கு வானமாதேவி என்று பெயர் சூட்டி வாழ்த்துப் பாடல்கள் புனைந்தார்கள். அது முதல் அரண்மனையிலும் நாடு நகரங்களிலும் உன்னை இந்திராணி என்றும், வானமாதேவி என்றும் என் பிரஜைகள் பெருமையோடு சொல்லி வருகிறார்கள். அப்பேர்ப்பட்ட உன்னை இந்தப் பல்லவ சிம்மாசனத்திலிருந்து இறக்கி விடுவதற்கு இந்த உலகிலே வேறு யாருக்கும் உரிமை கிடையாது...''

வானமாதேவி அப்போது குறுக்கிட்டு ஒரு கேள்வி கேட்டாள். ''சுவாமி! இந்தப் பல்லவ சிம்மாசனத்துக்கு மட்டுந்தானே நான் உரிமையுடையவள்? தங்களுடைய இதய சிம்மாசனத்தில் எனக்கு இடம் கிடையாதல்லவா?''

சற்றும் எதிர்பாராத மேற்படி கேள்வி மாமல்லரை ஒருகணம் திகைப்படையச் செய்து விட்டது. சற்று நிதானித்த பிறகு, வானமாதேவியை அன்புடன் நோக்கிச் சொன்னார் :

''ஆகா! இத்தகைய சந்தேகம் உன் மனத்திலே ஏற்பட்டிருந்தும் சென்ற ஒன்பது வருஷ காலமாக என்னை ஒன்றும்

கேளாமலே இருந்து வந்திருக்கிறாயல்லவா? தமிழ் மறை தந்த திருவள்ளுவ முனிவர்,

''தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை''

என்று கூறியருளினார். அவருடைய பொய்யா மொழிக்கு நீயே உதாரணமாவாய். சாதாரணப் பெண் ஒருத்திக்கு அத்தகைய சந்தேகம் தோன்றியிருந்தால் தினம் நூறு தடவை அதைப் பற்றிக் கேட்டுக் கணவனை நரக வேதனைக்கு உள்ளாக்கியிருப்பாள்!''

''பிரபு! அப்படியானால் இந்த அரண்மனையிலே நான் கேள்விப்பட்டதிலும், நாட்டிலும் நகரத்திலும் ஜனங்கள் பேசிக் கொள்வதிலும் உண்மை கிடையாதா? அதை எண்ணிக் கொண்டு நான் எத்தனையோ இரவுகள் உறக்கமின்றிக் கழித்ததெல்லாம் வீண் மடமைதானா?'' என்று வானமாதேவி சிறிது உற்சாகத்துடன் கேட்டாள்.

''தேவி! உண்மையில்லாமல் ஒரு வதந்தி பிறக்காது. நீ கேள்விப்பட்டது முழுவதும் பொய்யல்ல. ஆனால் அது என் பூர்வ ஜன்மத்தைச் சேர்ந்த விஷயம்'' என்று கூறிவிட்டு மாமல்லர் சற்று நேரம் அகநோக்குடன் இருந்தார். பின்னர் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு விட்டு அவர் கூறியதாவது :

''ஆம்! அது என் பூர்வ ஜன்மத்தின் நிகழ்ச்சி. தேய்ந்து மறைந்து போன பழைய கனவு. என்னுடைய இளம்பிராயத்தில், மகேந்திர பல்லவரின் ஏக புதல்வனாய் கவலையும் துயரமும் இன்னதென்று அறியாதவனாய் நான் வளர்ந்த காலத்தில், வானமும் பூமியும் ஒரே இன்பமயமாய் எனக்குத் தோன்றிய நாட்களில், ஒரு சிற்பியின் மகள் என் இதயத்தில் இடம்பெற்றிருந்தாள். அவளுக்காக என் உடல் பொருள் ஆவியையும் இந்தப் பல்லவ குலத்தின் பெருமையையும் தத்தம் செய்ய நான் சித்தமாயிருந்தேன். ஆனால், என்றைய தினம் அவளுடைய உள்ளத்திலே அன்பைக் காட்டிலும் ஆங்காரம் மேலிட்டு என்னுடைய இதமான வார்த்தையை உதாசீனம் செய்தாளோ, நூறு காத தூரம் நான் அவளைத் தேடிச் சென்று என்னுடன் வரும்படி அழைத்தபோது, வெறும் பிடிவாதம் காரணமாக என்னுடன் வருவதற்கு மறுத்தாளோ, அன்றே என்னுடைய இதயத்திலிருந்து அவள் விலகிச் சென்றாள். இன்னமும் அவளை நான் மறந்து விடவில்லை; மறக்க முடியவும் இல்லை. இதற்குக் காரணம் அவளுக்கு நான் அன்று கொடுத்த வாக்குறுதியை இன்னும் நிறைவேற்றாமலிருப்பதுதான். தூர தேசத்தில் பகைவர்களுடைய கோட்டைக்குள்ளே வசிக்கும் சிவகாமியின் ஆவியானது என்னை இடைவிடாமல் சுற்றிச் சுற்றி வந்து, பகலில் அமைதியில்லாமலும், இரவில் தூக்கமில்லாமலும் செய்து வருகிறது. என்றைய தினம் அவளுக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுகிறேனோ, வாதாபியை வென்று, அவளை விடுதலை செய்து, அவள் தந்தையிடம் ஒப்புவிக்கிறேனோ அன்று அந்தப் பாதகியின் ஆவி என்னைச் சுற்றுவதும் நின்று போய் விடும். அன்றைக்கே அவளுடைய நினைவை என் உள்ளத்திலிருந்து வேரோடு பிடுங்கி எறிந்து விடுவேன். பின்னர் என் மனத்திலே உன்னையும் நமது அருமைக் குழந்தைகளையும் இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின் மகோந்நதத்தையும் தவிர, வேறெதுவும் இடம்பெறாது. தேவி! நான் சொல்வதில் உனக்கு நம்பிக்கை ஏற்படுகிறதா! அல்லது இதெல்லாம் உலகில் காமாதுரர்களான புருஷர்கள் சாதாரணமாய்ச் சொல்லும் பசப்பு வார்த்தைகள் என்றே நினைக்கிறாயா?'' என்று மாமல்லர் கேட்டார்.

வானமாதேவி அந்தக்கணமே தந்தக் கட்டிலிருந்து கீழிறங்கி மாமல்லரின் பாதங்களைத் தொட்டு, ''பிரபு! தங்களுடைய வார்த்தை எதிலும் நான் அவநம்பிக்கை கொள்ளேன். தங்களுடைய வாக்குகளுக்கு விரோதமாக என் கண்ணெதிரிலே தாங்கள் நடந்து கொள்வதாகத் தோன்றுமானால், என் கண்களின் பேரிலேதான் அவநம்பிக்கை கொள்வேன்; தங்களைச் சந்தேகிக்க மாட்டேன்!'' என்றாள்.

சந்தேகமும் ஆங்காரமும் நிறைந்த சிவகாமியின் காதலுக்கும் இந்தத் தென் பாண்டிய நாட்டு மங்கையர் திலகத்தின் சாத்வீகப் பிரேமைக்கும் உள்ள வேற்றுமையைக் குறித்து மாமல்லரின் உள்ளம் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. சட்டென்று சுயநினைவு பெற்று வானமாதேவியை இரு கரங்களாலும் தூக்கிக் கட்டிலில் தம் அருகில் உட்கார வைத்துக் கூறினார் :

''இந்த விஷயத்தைப் பற்றி இப்போது கேட்டதே நல்லதாய்ப் போயிற்று. என் தலையிலிருந்து ஒரு பெரிய பாரத்தை நீக்கி விட்டாய். அதற்கு ஈடாக உன்னிடம் இந்தப் பெரிய ராஜ்யத்தின் பாரத்தை நான் ஒப்புவித்து விட்டுப் போகப் போகிறேன். நான் இல்லாத காலத்தில் மந்திரி மண்டலத்தார் இராஜ்ய விவகாரங்களைக் கவனித்துக்

கொள்வார்கள் என்றாலும், முக்கியமான காரியங்களில் உன்னுடைய அபிப்பிராயத் தைக் கேட்டே செய்வார்கள். ஆனால், தேவி! ஒரு முக்கியமான காரியத்தை மட்டும் உன்னுடைய தனிப் பொறுப்பாக ஒப்பு விக்கப் போகிறேன். அதை அவசியம் நிறை வேற்றித் தருவதாக நீ எனக்கு வாக்களிக்க வேண்டும்'' என்று சக்கரவர்த்தி கேட்டதும் வானமாதேவியின் முகத்தில் பெருமிதக் கிளர்ச்சி காணப்பட்டது.

''பிரபு! இந்த அபலைப் பெண்ணினால் ஆகக்கூடிய காரியம் ஏதேனும் இருந்தால் கட்டளையிடுங்கள். அதை என்னுடைய பரமபாக்கியமாகக் கருதி நிறைவேற்றி வைக்கிறேன்!'' என்றாள்.

''காரியம் இருக்கிறது. அது மிகவும் முக்கியமான காரியம். உன் சகோதரன் மகன் நெடுமாறன் ஒரு பெரிய சைனியத்துடன் வாதாபிப் படையெடுப்பில் என்னோடு சேர்ந்து கொள்வதற்காகப் புறப்பட்டான். இன்னும் வந்து சேரவில்லை. வராக நதிக்கரையில் தேக அசௌக்கியம் காரண மாகத் தங்கியிருப்பதாகவும் ஒரு வாரத்தில் காஞ்சிக்கு வந்து சேருவதாகவும் அது வரையில் நான் அவனுக்காகக் காத்திருக்க வேண்டுமென்றும் சொல்லி அனுப்பியிருக் கிறான். அப்படி நான் தாமதிப்பது அசாத் யமான காரியம். நமது குலகுரு பார்த்துச் சொன்ன நாளில் நான் கிளம்பியே தீர வேண்டும். தேவி! வழியில் நெடுமாறன் சமணர்களின் மாய வலையிலே விழுந் திருப்பதாக எனக்குச் செய்தி எட்டியிருக் கிறது. சமணர்கள் என் மீது எப்படியாவது பழி தீர்க்க வஞ்சம் கொண்டிருப்பதை நீ அறிவாய். இந்த நிலையில் நெடுமாறனால் இவ்விடம் நீங்கு எதுவும் நேராமல் நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும்.''

இப்படி மாமல்லர் கூறி வாய் மூடுவ தற்குள் வானமாதேவி, ''பிரபு! இந்த விஷ யத்தில் தாங்கள் கொஞ்சமும் கவலையின்றி நிம்மதியாகச் செல்லுங்கள். என் பிறந்த கத்தைச் சேர்ந்தவர்களால் தங்களுக்கு எவ் விதக் கெடுதலும் நேர்வதற்கு நான் விட மாட்டேன். நெடுமாறனுக்கு அத்தகைய தீய எண்ணம் ஏதேனும் இருப்பதாகத் தெரிந்தால் இந்தக் கையிலே கத்தி எடுத்து அவனுடைய நெஞ்சிலே பாய்ச்சிக் கொன்று விடுவேன்!'' என்று கம்பீரமாய் மொழிந் தாள்.

மாமல்லர் இலேசாகப் புன்னகை புரிந்து விட்டுக் கூறுவார் : ''வேண்டாம், வேண்டாம்! உன்னுடைய மல்லிகை இதழ் போல் மிருதுவான தளிர்க் கரங்கள் கத்தி யைப் பிடித்தால் நோகுமல்லவா? நீ கத்தி எடுக்க வேண்டாம். அப்படி ஒரு வேளை அவசியம் நேர்ந்தால் நமசிவாய வைத்தி யரைக் கேட்டு நல்ல விஷமாக வாங்கி வைத்துக் கொண்டு, அதைப் பாலிலே கலந்து கொடுத்து விடு!... ஆனால் அந்த மாதிரி அவசியம் ஒன்றும் அநேகமாக நேராது. என்னுடைய சந்தேகம் கொஞ்சமும் ஆதாரமற்றதாயிருக்கலாம். என்றாலும் இராஜ்யப் பொறுப்பு வகிப்பவர்கள் இப் படியெல்லாம் சந்தேகப்பட்டு முன் ஜாக் கிரதை செய்தல் அவசியமாயிருக்கிறது! அதி லும் யுத்தத்துக்காகத் தூரதேசத்துக்குக் கிளம் பும் போது சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமல்லவா?''

இப்படி மாமல்லர் கூறி முடித்தாரோ இல்லையோ, அரண்மனையின் கனமான நெடுஞ்சுவர்களையெல்லாம் அதிரச் செய்து கொண்டு ஒரு பெரு முழக்கம் கேட்டது. கேட்கும்போதே ரோமச் சிலிர்ப்பு உண்டா கும்படியான அந்தச் சப்தம் வெளியிலே எங்கேயோ தொலை தூரத்திலிருந்து வரு கிறதா அல்லது தரைக்கு அடியிலே பாதா ளத்திலேயுள்ள பூகர்ப்பத்திலேயிருந்து வரு கிறதா என்று தெரியாதபடி அந்தப் படுக்கை அறைக்குள்ளே எப்படியோ புகுந்து வந்து சூழ்ந்தது. அந்தச் சப்தம் காதினால் கேட்கக் கூடிய சப்தம் மட்டும் அல்ல! உடம்பி னாலே ஸ்பரிசித்து உணரக்கூடிய சப்தமா யிருந்தது.

''ஆகா! நடுராத்திரி ஆகி விட்டது! யுத்த பேரிகை முழங்குகிறது!'' என்று மாமல்லர் துள்ளி எழுந்தார்.

அவ்வாறு மாமல்லரைத் துள்ளி எழச் செய்த யுத்தபேரிகையின் முழக்கம், அவ ருடைய மனக் கண்ணின் முன்னால் அதி பயங்கரமான போர்க்களங்களின் காட்சி யைக் கொண்டு வந்து காட்டியது. பெரிய கருங்குன்றுகள் இடம் விட்டு நகர்ந்து ஒன்றையொன்று தாக்குவது போல், ஆயிரக் கணக்கான போர் யானைகள் கோரமாகப் பிளிறிக் கொண்டு, ஒன்றையொன்று மோதித் தாக்கின. நூறு நூறு ரதங்கள் பூமி அதிரும்படியாக விரைந்து சென்று, ஒன்றின் மீது ஒன்று இடித்துத் தூள் தூளாகி விழுந் தன. பதினாயிரக்கணக்கான குதிரைகள் வாயு வேகமாகப் பாய்ந்து சென்று போர்க் களத்தின் மத்தியில் சந்திக்க, அவற்றின் மீதிருந்த போர் வீரர்கள், கையிலிருந்த ஈட்டிகளைக் கொண்டு, ஒருவரையொருவர் தாக்கிய போது, ஈட்டிகள் மின்னலைப் போல் ஒளிவீசிக் கண்களைப் பறித்தன. லட்சக்கணக்கான போர் வீரர்கள் கூரிய வாள்களைக் கொண்டு ஒருவரையொருவர் வெட்டித் தள்ளினார்கள். பார்க்கப் பயங்கர மான இரத்த வெள்ளம் ஒரு பெரிய மாநதி யின் பிரவாகத்தைப் போல் ஓடிற்று. அந்த



''யுத்த பேரிகை முழங்குகிறது. நான் உன்னிடம் விடைபெற வேண்டிய சமயம் நெருங்கிவிட்டது...'' என்று அந்தப் பெரியவர் கூறினார்.

பிரவாகத்தில் உயிரிழந்த கரிகளும், பரிகளும், காலும் கையும் தலையும் வெட்டுண்ட மனிதர்களின் உடல்களும் மிதந்து சென்றன.

இந்தப் பயங்கரமான கோரக் காட்சியுடன் கலந்து கலந்து, ஒரு பெண்ணின் ஆங்காரம் நிறைந்த முகத்தோற்றமும் மாமல்லரின் அகக் காட்சியில் தென்பட்டது! அது சிற்பி மகள் சிவகாமியின் முகந்தான் என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா?

# பத்தாம் அத்தியாயம்
# மங்கையர்க்கரசி

அர்த்த ராத்திரியில் அந்தப்புரத்துக்குள்ளே புகுந்த மாமல்லரின் காதிலே ஒலித்த யுத்த பேரிகையின் முழக்கமானது, அந்தக் காஞ்சி நகரில் வாழ்ந்த லட்சக்கணக்கான மக்கள் காதிலும் ஒலித்தது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவித உணர்ச்சியை அந்த முழக்கம் உண்டாக்கிற்று.

அந்த நடுநிசி வேளையில், காஞ்சி அரண்மனையைச் சேர்ந்த நந்தவனத்தில், பிராயம் முதிர்ந்த ஒரு மனிதரும் கட்டழகியான ஓர் இளம் பெண்ணும் தனிமையாக உலாவிக் கொண்டிருந்தார்கள். வானத்திலே பிரகாசித்துக் கொண்டிருந்த சந்திரனோடு போட்டியிட்டுக் கொண்டு, அந்தப் பெண்ணின் வதன சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தது. யுத்த பேரிகையின் முழக்கத்தைத் திடீரென்று கேட்டதும் பெருங்காற்றில் பூங்கொடி நடுங்குவதைப் போல், அந்த யுவதியின் உடம்பும் நடுங்கிற்று. பீதி நிறைந்த குரலில், ''அப்பா! இது என்ன ஓசை?'' என்று கேட்டுக் கொண்டே அந்தப் பேதைப் பெண் தன் தந்தையைக் கட்டிக் கொண்டாள்.

''குழந்தாய்! யுத்த பேரிகை முழங்குகிறது! நான் உன்னிடம் விடைபெற வேண்டிய சமயம் நெருங்கி விட்டது!'' என்று அந்தப் பெரியவர் கூறினார்.

நிலா வெளிச்சத்தில் சற்று உற்றுப் பார்த்தோமானால் அந்த இருவரையும் நாம் ஏற்கெனவே பார்த்திருக்கிறோம் என்பது நினைவு வரும். ஆம்! அன்று பகலில் ஏகாம்பரேசுவரர் சந்நிதியில் புருஷர்களின் கோஷ்டியிலே அந்தப் பெரியவரும், பெண்களின் வரிசையிலே அந்த இளநங்கையும் நின்று கொண்டிருக்கவில்லையா? அந்தப் பெண்ணின் முகத்திலே அப்போது ததும்பிய பரவசமான பக்தி பாவத்தைக் கண்டு நாம் வியக்கவில்லையா?

அவ்விருவரும் கொடும்பாளூர்ச் சோழ வம்சத்தைச் சேர்ந்த செம்பியன் வளவனும், அவனுடைய செல்வத் திருமகளுமேயாவர்.

கரிகால் வளவன் காலத்திலிருந்து சில நூற்றாண்டுகள் மிகப் பிரபலமாக விளங்கியிருந்த சோழ ராஜ்யமானது, நாளடைவில் சீரும் சிறப்பும் குன்றித் தெற்கே பாண்டியர்களாலும், வடக்கே பல்லவர்களாலும் நெருக்கப்பட்டு, மிக்க க்ஷீண நிலையை அடைந்ததோடு, சோழ வம்சமும் இரண்டு மூன்று கிளைகளாகப் பிரிந்து போயிருந்தது. உறையூரில் நிலைபெற்ற சோழ வம்சத்து மன்னர்கள் ஒரு சிறு ராஜ்யத்துக்கு உரியவர்களாயிருந்தார்கள். கொடும்பாளூர்க் கிளை வம்சத்தின் பிரதிநிதியாக அப்போது விளங்கிய செம்பியன் வளவனுக்குப் புத்திர பாக்கியம் இல்லை. குலத்தை விளங்க வைக்க ஒரு புதல்வி மட்டுமே இருந்தாள். அந்த அருமைக் குமாரிக்கு 'மங்கையர்க்கரசி' என்ற செல்வப் பெயரைச் செம்பியன் வளவன் சூட்டினான். ஆசை காரணமாகத் தகப்பன் சூட்டிய பெயர் என்றாலும், பெண்ணைப் பார்த்தவர்கள் அனைவரும், 'இத்தகைய பெண்ணுக்கு இந்தப் பெயரே தகும்' என்றார்கள். அப்படித் தேக சௌந்தரியத்திலும் குண சௌந்தரியத்திலும் அவள் சிறந்து விளங்கினாள்.

தன்னுடைய ஆயுள் முடிவதற்குள்ளே தன் மகளைத் தென்னாட்டின் சிறந்த இராஜ வம்சம் ஒன்றில் பிறந்த இராஜகுமாரனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விட வேண்டும் என்ற ஆசை செம்பியன் மனத்திலே குடிகொண்டு, இரவு பகல் அதே கவலையாக இருக்கும்படி செய்தது. இந்த நிலையில், வாதாபி படையெடுப்புச் சைனியத்தில் வந்து சேரும்படி, தென்னாட்டு மன்னர் குலத்தினர் அனைவருக்கும் மாமல்லரிடமிருந்து ஓலை வந்தது போல் அவனுக்கும் வந்து சேர்ந்தது. செம்பியன் தன் வாழ்நாள் மனோரதம் நிறைவேறுவதற்கு இதுவே தருணம் என்று எண்ணி உற்சாகமடைந்தான். இந்தத் தள்ளாத பிராயத்தில் அவன் போருக்குக் கிளம்பி வந்ததற்கு முக்கிய காரணம், காஞ்சி நகரில் அச் சமயம் பல தேசத்து இராஜகுமாரர்கள் கூடியிருப்பார்



## அருள்வாக்கு

இன்றைய பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்களின் கடமை, ஜனங்களுக்குப் பிடித்ததை மட்டுமே சொல்வது என்று வைத்துக் கொள்ளக் கூடாது. அவர்களின் அறிவை, மனத்தை உயர்த்துகிற விஷயங்களையே எழுத வேண்டும் - இதைச் சுவாரசியமாகச் செய்ய வேண்டும். உத்தமமான விஷயங்களை புதுப்புது விதங்களில் உணர்த்த வேண்டும். பத்திரிகையாளர்கள் வாழ்நாள் முழுவதும் மாணாக்கர்களாகவே இருந்தால்தான், தாங்களும் இப்படிப் புதுப்புது விஷயங்களை அறிந்து, மற்றவர்களுக்குப் பிரசாரம் செய்ய முடியும்.

சத்தியத்தைச் சர்க்கரைப் பூச்சிட்ட மாத்திரைகளாக்கித் தர வேண்டும். சர்க்கரைப் பூச்சுத்தானே ஒழிய, முழுக்கவும் சர்க்கரையாகி விடக் கூடாது. வெறும் இந்திரிய ரஞ்சகமான சமாசாரங்களில்தான் ஜனங்களுக்கு அதிகக் கவர்ச்சி இருக்கிறது என்று சொல்லிக் கொண்டு, இவ்விதமே எழுதுவது சரியல்ல. ஜனங்களுக்கு ஆத்மாபிவிருத்தி தருகிற முறையில் எழுதுவதற்கு, இருதயபூர்வமாக எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள் முனைந்தால், தானாகவே ஜனங்களுக்கு அதில் ருசி பிறக்கும். 'நம்மையும் உயர்த்திக் கொண்டு, நம் வாசகர்களையும் நாம் உயர்த்த வேண்டும்' என்கிற கடமை உணர்ச்சியைப் பெற வேண்டும். இவ்விதம் ஆத்ம க்ஷேமம், லோக க்ஷேமம், சாந்தி, சுபிட்சம் எல்லாவற்றுக்கும் மெய்யான சேவை செய்கிற பாக்கியத்தைப் பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள் பெற வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

கவென்றும், அவர்களில் யாருக்கேனும் மங்கையர்க்கரசியை மணம் புரிவிப்பது ஒருவேளை சாத்தியமாகலாம் என்றும் அவன் நம்பியதுதான்.

"அப்பா! உண்மையாகவே என்னை இங்கே விட்டு விட்டுப் போகப் போகிறீர்களா? இந்தப் பெரிய அரண்மனையில், முன்பின் தெரியாதவர்களுக்கு மத்தியில், நான் எப்படிக் காலங்கழிப்பேன்? ஒருவேளை யுத்தகளத்திலே தங்களுக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் என் கதி என்ன ஆவது!" என்று புலம்பினாள் செம்பியன் குமாரி மங்கையர்க்கரசி.

"குழந்தாய்! நமது குல தெய்வமான முருகப் பெருமான் உன்னைக் காப்பதற்கு இருக்கும் போது நீ ஏன் கவலைப்பட வேண்டும்? எந்தப் பெருமானுடைய வேலாயுதமானது மலையைப் பொடியாக்கியதோ, கடல் நீரை வற்றச் செய்ததோ, சூரனை வதைத்ததோ, பானுகோபனை சம்ஹரித்ததோ, தேவர்களுக்கு அபயப் பிரதானம் அளித்ததோ, அத்தகைய வெற்றிவேல் உனக்கு என்றும் துணையாயிருக்கும். குழந்தாய்! நீ கொஞ்சமும் அதைரியப்படாமல் எனக்கு விடைகொடுக்க வேண்டும்" என்று செம்பியன் கூறியதைக் கேட்ட மங்கையர்க்கரசி, மெய்சிலிர்த்துப் பரவச நிலை அடைந்து நின்றாள்.

அவளுடைய பக்தி பரவச நிலையைத் தெரிந்து கொள்ளாத தந்தை, "அம்மா! வேலும் மயிலும் உனக்குத் துணையாக இருப்பதோடு, மாமல்ல சக்கரவர்த்தியின் தாயார் - மகேந்திர பல்லவரின் பட்டமகிஷி - புவனமகாதேவியும் உனக்கு ஆதரவாக இருப்பார். உன்னைத் தன் சொந்த மகளைப் போல் பாதுகாத்து வருவதாக எனக்கு வாக்குத் தந்திருக்கிறார். நீ உன் அன்னையை இளம்பிராயத்திலே இழந்து விட்டாய். புவனமகாதேவிக்கோ சொந்தப் புதல்வி கிடையாது. உன்னைத் தன் கண்மணியைப் போல் பாதுகாத்துத் தருவதாக என்னிடம் உறுதி கூறியிருக்கிறார். ஆகையால், என் செல்வ மகளே, நீ சிறிதும் கவலைப்பட வேண்டாம். போர்க்களத்துக்குப் போக எனக்குத் தைரியமாக அனுமதி கொடு!" என்றான்.

இதற்கும் மங்கையர்க்கரசி மறுமொழி கூறாமல் மௌனமாய் நிற்கவே செம்பியன் வளவன் இன்னமும் சொல்வான் :

"மகளே! நீ பால்மணம் மாறாத பச்சைக் குழந்தையாயிருந்த போது, ஒரு பெரியவர் நமது வீட்டுக்கு வந்தார். அவர் உன்னைப் பார்த்தார். உன் முகத்தை உற்றுப் பார்த்தார். உன் சின்னஞ்சிறு பிஞ்சுக் கைகளைத் தூக்கிப் பார்த்தார். பார்த்து விட்டு, 'இந்தக் குழந்தையின் கையில் சங்கு சக்கர ரேகை இருக்கிறது; இவள் பெரிய மண்டலாதிபதியின் பட்டமகிஷியாவாள்!' என்று சொன்னார். அந்த வார்த்தைகள் என் காதிலே இனிய தேனைப் போல் பாய்ந்தன. அன்று முதல் இராஜகுமாரன் எப்போது வரப் போகிறான், எங்கிருந்து வரப் போகிறான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அவனைத் தேடிக் கொண்டுதான் முக்கியமாக நான் இந்தக் காஞ்சி நகருக்கு வந்தேன்!...."

மங்கையர்க்கரசி அப்போது அளவில்லாத பரபரப்புடன், "அப்பா! அப்பா! நேற்றிரவு நான் ஒரு அதிசயமான கனவு கண்டேன். அதைச் சொல்லட்டுமா?" என்று கேட்டாள்.

*(தொடரும்)*

# காத்திருத்தல்

"என்னை ஒன் தலையில் கட்ட றதாத் திட்டம்."

மீனம்பாக்கம் இண்டர்நேஷனல் ஏர் போர்ட் லவுஞ்சுக்கு வெளியே ஏழு மணிக் காலையின் குளுமை. குறுஞ்செடி நிழல். சுனந்தா எதிரிலிருந்த சுவாமிநாதனிடம் சொன்னாள்.

சுனந்தா சுதந்திரமானவள். குறைந்த பட்சம் அப்படி ஒரு நினைப்பு. எதுவும் பேசுவாள். ஆனால் எதிர்பாராத இந்தப் பூசணி உடைப்பு சுவாமிக்கு அதிர்ச்சியே.

காட்டிக் கொள்ளவில்லை. அதிர்ச்சி காட்டினால் அவளுக்கு 'கிக்' பிறந்து விடும். தொடர்ந்து மென்மேலும் அதிர்ச்சி தரும் ஆர்வம் உதிக்கும்.

"இருக்கலாம்" என்றான்.

"ஏ குளிர் ரத்தப் பிராணியே!" என்று செல்லமாக நாடகபாணியில் அழைத்தாள் சுனந்தா.

தன் சட்டையில் ஊர்ந்த ஒரு சிவப்பு வண்டை கேரம் ஸ்ட்ரைக்கரைத் தட்டுவது போல் தட்டினான் சுவாமி.

"லோ ஒனக்கும் ஒரு நப்பாசைதான்னு சொல்லு."

சுவாமி தன் இமைகளை நிதானமாக உயர்த்தினான். "இத பாரு சுனி! எனக்கு அட்ரஸ் கெடையாது. ஆர்ஃபனேஜிலிருந்து வந்தவன். படிக்க வக்கிறாங்க. சோறு துணி மணி காலேஜ் பீஸ் தர்றாங்க. பதிலுக்கு நான் வீட்டு வேலை ஆபீஸ் வேலைல அஸிஸ்ட் பண்றேன். தட்ஸ் ஆல். இந்த நப்பாசை தப்பாசைல்லாம் எனக்குக் கெடையாது. யூ நோ இட்..."

"வெப்பரத்தப் பிராணி ஆக முயற்சி பண்றே!"

பெற்றோரிடமிருந்து பிரிந்து தத்தித் தத்திச் சிரித்தவாறே அவர்களை நோக்கி நடந்து வரும் ஒரு குழந்தை பக்கம் அவன் பார்வையைத் திருப்பினான்.

"இதை எல்லாம் எதுக்காகச் செய்யறாங்கன்னு நீ 'கெஸ்' பண்ணலே?"

சுவாமி இல்லையென்று தலையாட்டினான்.

"எங்க சித்தியும் பொண்ணும் ஸ்டேட்ஸிலிருந்து வரப் போறாங்க. ரிஸீவ் பண்ண நான் மட்டும் போதுமே! நீ எதுக்கு எக்ஸ்ட்ரா அவுட் ஃபிட்டிங்? புரியலே..." என்று புரியவைப்பவள் போல் கேட்டாள்.

சுனந்தாவுக்குள் திமிறும் அந்த மனக் குதிரையின் கடிவாளத்தை இறுகப் பிடித்து, அதை ஒரு ஸ்தானத்தில் நிற்க வைத்தால் எப்படி இருக்கும் என்ற பாணியில் அவ ளைப் பார்த்தான் சுவாமி.

"ஒன்னை மாதிரி ஒரு கீழ்ப்படிதலுள்ள பூஞ்சன்தான் அவர்கள் எனக்குப் பார்த்திருக் கும் மேட்ச். வாயாடி. அகங்காரி. திமிர் பிடிச்சவ. கொழுப்பேறினவ. இத்தனைக் கும் பாதிக்கப்படாத ஒரு மகாபுருஷன்தான் லாயக்காவான். அதான் நீ."

அவன் வருந்தினான். அந்த வார்த் தைகளுக்காக.

"என் நிகழ்காலம் பாதிக்கக் கூடாது. என் எதிர்காலம் பாதிக்கக் கூடாது. கிளாஸ்ல எப்பவும் நான் ஃபர்ஸ்ட் ராங்க் வாங்கணும். பேச்சுப் போட்டில நான்தான் பர்ஸ்ட் வரணும். எப்பவும் எதிலயும் எனக்குக் குறைவு வந்துடப்படாது. கேட்டா என் சந்தோஷம்தான் அவங்க சந்தோஷ மாம். என் கண் எவ்விக்கும் கலங்கிடப் படாது. எப்பவும் நான் இவங்களோட ஸ்டேட்டஸ் ஸிம்பலா உல்லாசமாவே, இண்டலிஜண்டாவே இ ரு ந் து ட் டி ரு க் கணும்."

சரமாரியாக ஒரு சப்மெஷின் கன் போல அவள் சீறிக் கொண்டிருந்தாள்.

"ஐ ஆம் எ ஹ்யூமன் பீயிங் சுவாமி. எனக்கு அழணும், போராடணும், ஏங்க ணும், மாஞ்சு மருகணும், பள்ளத்திலே விழுந்துட்டு ஒசரத்துக்கு ஏறணும். எல்லாம் நானா சுயமாச் செய்யணும். இத்தனை 'கேம்' இல்லேன்னா இது என்ன லைஃப் சாம்?"

"இல்லே."

"எது இல்லே?"

"லைஃப் இல்லே."

"கரெக்ட். அந்த மகானுபாவன் ஜேகே சொன்னாரே செக்யூரிடி ஈஸ் எ பிரிஸன். பாதுகாப்பே ஒரு சிறைன்னு."

வையவன்

''எந்த ஜேகே?''

''ஜே. கிருஷ்ணமூர்த்தி.''

''ஓஹோ.''

''படிச்சதில்லே?''

''இல்லே. ஆனா இப்ப எனக்கு வேற மாதிரி தோணுது.''

''என்ன?''

''பிரிஸன் ஈஸ் எ செக்யூரிடி.''

''ஒன்னை மாதிரி பட்டாணி கண்ட ஓக்கு அப்படித்தான் தோணும்.''

''யுவர் அட்டென்ஷன் ப்ளீஸ்'' என்று ஒலிபெருக்கி அவர்கள் சச்சரவிடாதவாறு குறுக்கிட்டது.

அவர்கள் காத்திருக்கும் விமானம் வானிலை சீரற்ற காரணத்தால் ஆறரை மணி நேரம் தாமதமாக வரலாம் என்று எதிர் பார்க்கப்படுகிறதாம்.

''என்ன செய்வோம்?'' என்று கேட்டான் சுவாமி.

''காத்திருப்போம்.''

''இங்கே?''

''எஸ். ஜனங்களைப் பாரு. என்ன போராட்டம்.. கறுகறுப்பு. ரொம்ப நல் லால்லே.. இவங்க காலை என்ன எதிர் பார்ப்போட இருக்கு.''

''வீட்டுக்குப் போய்ட்டு மறுபடியும் வருவோமே.''

''ஐ ஹேட் கோயிங்.''

சுவாமி யோசித்தான்.

''ஒன்னு செய்வோம். திரிசூலம் ஸ்டேஷனுக்குப் பின்னாடி மலையோரமா ஒரு பாதை போவுது. திரிசூலம் கிராமத் துக்கு. அங்கே ஒரு மாரியம்மன் கோயி லுண்டு.''

''எனக்கு நீயே மணவாளனாக வர ணும்னு வேண்டிக்கிட்டு வருவமா?''

அவன் பாசிப் பிரதேசத்தில் கால் வைக் காமல் ஒதுங்குவது போல ஒரு 'கமெண்ட்' தவிர்த்துச் சொன்னான், ''கால்நடையா அங்கே போய்ட்டு வருவோம்.''

''எவ்வளவு தூரம்?''

''ரெண்டு ரெண்டரை கி.மீ.''

''ஓ.கே.''

அவர்கள் உடை உதறி எழுந்த போது கனந்தா அவனிடம் கேட்டாள்.

''சாம்... டு யூ லவ் மீ?''

''நோ... டெஃபனிட்லி ஐ டோன்ட்.''

''நீ புத்திசாலி.''

''நீயும்தான்.''

பார்க் செய்திருந்த காரின் கண்ணா டியை உயர்த்தி விட்டு கதவைப் பூட்டி, சாவி யைக் கையில் எடுத்துக் கொண்டான். தூரத் தில் அவர்களை ஒரு செக்யூரிடி கவனித்தார்.

''இரு'' என்று கனந்தாவை நிற்க வைத்து விட்டு அவரை நோக்கி நடந்தான். காரைக் காட்டி என்னமோ சொன்னான் சுவாமி. அவரும் தலையாட்டினார். திரும்பி அவளை நோக்கி நடந்து வந்தான்.



''என்ன சொன்னே... காரைப் பத்திரமா கவனிச்சுக்கோன்னா?''

''நிறையக் கார்த் திருட்டு.''

''நம்ம காரும் போனாப் போகட்டுமே! நடக்கிறது. இல்லே டாக்ஸி பிடிக்கிறது. என்ன கெட்டுடும்? என்ன கொறைஞ்சுடும்?''

அவளை ஒரு மாதிரி பார்த்தான் சுவாமி.

''நீ பதில் சொல்லணுமேன்னு பயப்படறே இல்லே?''

அவன் பேசவில்லை.

''ஜஸ்ட் திஸ்... இந்த பதில் சொல்லணுமேங்கிற பயம் ஒங்கிட்ட இருக்கு பாரு! இதுதான் என் பெற்றோருக்கு ரொம்பப் பிடிச்ச அம்சம், ஒங்கிட்ட. அதனாலேதான் ஒன்னை செலக்ட் பண்ணியிருக்காங்க. என்ன பார்க்கறே! டோன்ட் யூ அக்ரீ?''

''இல்லே, நாம நடந்துட்டே பேசுவோம்.''

அதிக நடமாட்டமற்ற அகன்ற தார்ச் சாலையில் அவர்கள் கைவீசி நடந்தனர். அவள் நீலவானை சற்றுத் தள்ளி நெடுஞ்சாலையில் ஓடும் வாகன வெள்ளத்தை ஒரு சிறு குழந்தை போல் ரசித்தாள்.

''இந்தக் காரை நீ நெத்தி வியர்வை நிலத்தில் விழச் சம்பாரிச்சு வாங்கியிருந்தா இப்படிச் சொல்ல மாட்டே!''

''ஹியர் ஹியர்..... அதான் என் கேள்வி! ஹூ ஆஸ்க்ட் தெம் டு பை மீ எ கார்?''

சுவாமி அவள் திசை திருப்புவதை உணர்ந்து மௌனமானான்.

''ஒரு கார் வாங்கணும். சுயமாச் சம்பாரிச்சு வாங்கணும்னு எனக்கு ஒரு வெறி வர அவங்க சான்ஸ் கொடுத்தாங்களா?''

''..........''

''இப்ப அவங்க எனக்கு ஒரு புருஷன் வாங்கணும்னு மும்முரமா இருக்காங்க. ஸீ ஐ ஹாவ் நோ சாய்ஸ்.''

பேசிக் கொண்டே திரிசூலம் கிராமத்தை அடையும் போது மணி எட்டரை. மாரியம்மனுக்குச் சூடம் கொளுத்திக் கும்பிட்டு ஒரு மலிவான டீக்கடையில் சரியாகக் கழுவப்படாத டீ கிளாஸை தேய்த்துக் கழுவச் சொல்லி டீ குடித்தனர்.

அவர்கள் நடை தொடர்ந்தது.

''ஐ வாண்ட் டு பி தன் லைக் சம் ஒன். நான் வெறும் சுவந்தா. ஜஸ்ட் ஸிம்பிள் ஸில்லி சுவந்தா.''

''ஆல்ரைட்... ஆல்ரைட். நீ நீயாவே இருக்கறதுக்குக் கூட ஏகப்பட்ட அவுட்லட் இருக்கே.''

''எம்ப்ராய்டரி, ஹார்டி கல்சர், மீன் வளர்ப்பு, காகித பொம்மை செய்தல், பொடாடோ ஹல்வா செய்தல்.''

அவன் வெடித்துச் சிரித்து விட்டான்.

''எனக்கு ஓடிப் போகணும் போல இருக்கு சாம்.''

''எங்கே?''

''தெரியலே. எங்கேயாவது.. தூர தூர தூர ஒரு தொலை தூரத்துக்கு.''

''ஏன்?''

''டு ஃபைண்ட் மீ. என்னை நான் கண்டுபிடிச்சாகணும்.''

அவன் சட்டென்று நின்றான். அவளைக் கூர்மையாக, நிதானமாக. நீ சொல்வதன் அர்த்தம் என்னவென்று உனக்குத் தெரியுமா என்று கேட்கிற மாதிரி ஆழமாகப் பார்த்தான்.

அவளது இதயமுரசின் சங்கீதம் மெதுவாகக் கேட்பது புரிந்தது. மெல்லிய தொனியில் வெகு தொலைவில்.. அல்ல... அல்ல வெகு ஆழத்தில் அது ஒலிக்கிறது.

என் பிரியமான சுவந்தா! இது எத்தனை மகத்தான தாகம் தெரியுமா. உடைமைகள் மீதும் பற்றுக்கள் மீதும் பிடி விலகிப் போனால் இது நேரும். நிச்சயம் நேரும். ஆனால் நீ எங்கே ஓடுவாய்? ஓடினாலும்



தலைவர் : என்னய்யா ஆள் அழைச்சிட்டு வந்திருக்கே...? கண்ட கண்ட நேரத்துல கைதட்டறாங்களே...?

உதவியாளர் : தப்பா நெனைக்காதீங்க தலைவரே... கொசுக்கடி தாங்க முடியாமல் எல்லாரும் தட்டிக்கிறாங்க!

- சீர்காழி வி. ரேவதி

''பேச்சாளராக இருப்பதை விட எழுத்தாளராக இருப்பதில் பாதுகாப்பு அதிகம்னு எதை வெச்சுச் சொல்றீங்க?''

''கல்லுக்குப் பதிலா கடிதம்தானே வரும்?''

- எஸ். சந்திரசேகர்



உன்னைக் கண்டுபிடித்து விடுவாய் என்று என்ன நிச்சயம்?

ஓடி வந்து விட்டதற்காக ஒருநாள் வருத்தப்பட்டு அழுதால், உன் கதை சப்பிட்டு விடும். பெரிய ஃப்ளாப்!

''ஒண்ணு செய்றியா சாம்?'' என்றாள்.

''என்ன?''

''நீ எங்கியாவது ஓடிடேன்!''

''எதுக்கு?''

''எங்க வீட்டிலே என்னை ஒன் தலையிலே கட்டறதாத் திட்டவட்டமா முடிவாயிடுச்சு. ஐ டோண்ட் லவ் யூ. நீயும் என்னை லவ் பண்ணலே. இங்கேயே இருந்துட்டிருந்தா நாஸ்திதான். கல்யாணம் பண்ணிடுவாங்க. நாம தலையைப் பிராண்டிக்க வேண்டியதுதான். என்ன?''

அவன் மெதுவாய் நடந்தான்.

''சொத்து வசதி சுகம் இதெல்லாம் பாத்துட்டுத் தயங்கறியா?''

''முட்டாள்.''

''பின்னே செஞ்சோற்றுக் கடனா?''

''இல்லை...''

''பின்னே நீ ஓடித் தொலையறத எது தடுக்கிறது?''

''எனக்கு ஓடத் தோணலே.''

''என்னைக் கல்யாணம் பண்ணிக்கச் சம்மதமா?''

''இப்ப சொல்லத் தெரியலே. கேட்கப்பட்டா அப்ப யோசிப்பேன்.''

''கட்டாயப்படுத்தினா?''

''என்னை யாரும் எதுவும் கட்டாயப் படுத்த முடியாது. நான் நன்றியுடையவன். ஆனால் அடிமை இல்லே. நான் காத்திருப்பேன். எல்லாம் மாறிடும். ஐ நோ ஐ நோ.''

''சபாஷ்.''

அவர்கள் பேசிக் கொண்டே நடந்ததில் வெயிலோ நடைக் களைப்போ தெரியவில்லை.

திரிசூலம் ஸ்டேஷன் வந்தது.

இருவரிடமும் பேச்சாற்றல் போனது போல் மௌனமாக ஒரு சிமெண்ட் பெஞ்சின் இரு கோடிகளிலும் உட்கார்ந்திருந்தனர்.

அங்கிருந்து மீனம்பாக்கம் விமான நிலையம் தெரிந்தது. ஓரிரு விமானங்கள் பறந்து வந்ததை ஒரு வருகையை எதிர்பார்க்கும் ஆர்வத்தோடு கவனித்தனர். பசித்தது. வெளியே வந்து சமோஸா வடை சாப்பிட்டனர்.

ஒன்றரை மணிக்கு சாலையைக் கடந்து விமான நிலையம் சென்றனர். ரன்வேயை அவர்கள் எதிர்பார்த்த விமானம் தொட்டு, ஒரு மணி நேரம் கழித்து கனந்தாவின் சித்தியும் அவள் மகள் ஜைனியும் வந்தனர்.

''சித்தி'' என்று அவளைக் கட்டிக் கொண்டாள் கனந்தா.



''உங்க ஆபீஸ்ல ஒவ்வொருத்தரும் ஆளுக்குக் கொஞ்சம் பணம் போட்டு 'டு-வீலர்' வாங்கிகிறீங்களா.. எதுக்கு?''

''வெளியில போய் லஞ்சப் பாக்கியை வசூல் பண்ணிட்டு வரத்தான்!''

- சேலம் நீலமேகம்

''ஹாய்'' என்றாள் ஜைனி. என்ன வளர்ச்சி. என்ன பிடுக்கான ஆளைத் தூக்கியடிக்கும் அழகு. கனந்தா அவளையே தன்னை மறந்து பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவள் சுவாமிநாதனிடம் வெகுவாகக் குழைந்தாள். சந்தித்து ஐந்து நிமிஷமாவதற்குள் அவளது கண்களில் ஒரு புதிய ஒளி, ஒரு கண்டுபிடிப்பு, ஒரு சொந்தம், ஒரு 'லாண்டிங்' தோன்றிய மாதிரி அவளுக்குப் பட்டது.

அவன் காத்திருப்பதாகச் சொன்னானே! இவளுக்காகவா?

அவள் முகத்தை அதில் வீசும் அலாதி ஒளியைப் பார்த்தால் அவளும் இவனுக்காகக் காத்திருந்தவள் போல் தென்பட்டது.

முதல் முறையாகத் தனக்குள் ஓர் இம்சை உதித்ததை கனந்தா உணர்ந்தாள்.

ஏனோ அவளுக்கு ஜைனியைப் பிடிக்கவில்லை.

ஜைனியும் சுவாமியும் ரொம்ப ஒவராகப் பழகுகிற மாதிரி, மிகையாகச் சிரிக்கிற மாதிரி, ஏதோ பகிரங்கமாகச் சரசமாடுகிற மாதிரி அவளுக்குத் தோன்றியது.

அவள் ஜைனியை லேசாக வெறுக்கத் தொடங்கினாள்.

கார்க் கதவை ஜைனிக்காக சுவாமி திறந்து விட்டான்.

''சித்தி நீங்க முன் ஸீட்டிலே உக்காருங்க! நானும் ஜைனியும் பின்னால் ஒக்காந்துக்கறோம். அப்பத்தான் மெட்ராஸ்ல நீங்க வந்து போன லாஸ்ட் ட்ரிப்புக்கு அப்புறம் எவ்வளவு மாற்றம்னு தெரிஞ்சுக்கலாம்'' என்று ஒரு காரணம் சொன்னாள்.

ஜைனி சுவாமியைப் பார்த்தாள்.

சுவாமி கனந்தாவைப் பார்த்தான்.

சித்தி முன் ஸீட்டில் ஏறி உட்கார்ந்தாள்.

காரை ஸ்டார்ட் செய்யும் போது, சுவாமி முகத்தில் ஒரு பரிகாசச் சிரிப்பு வெளிப்பட்டது போல் கண்ணாடியில் தென்பட்டது. கனந்தா பொருட்படுத்தவில்லை.

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி, ஜூன் 16, 1942

### நாம் கெட்டிக்காரர்கள்!

ருஷிய சர்க்காரும் பிரிட்டிஷ் சர்க்காரும் மூன்று வருஷத்துக்கு முன்னால் நாய்களையும் பூனைகளையும் போன்ற பிராண சிநேகிதர்களாயிருந்தனர்! ''ருஷிய போல்ஷிவிக்கர்களைப் போல் நாஸ்திக நீசர்கள் உலகில் எக்காலத்திலும் இருந்ததில்லை'' என்று ஆங்கிலேயரும், ''ஆங்கிலேயரைப் போன்ற இரக்கமற்ற கொடிய பாவிகள் முக்காலத்திலும் கிடையாது'' என்று ருஷியர்களும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அப்படிப்பட்டவர்கள் தங்கள் தேசத்துக்கு நேர்ந்திருக்கும் பேராபத்தின் காரணமாகப் பழைய வைஷம்யங்களையெல்லாம் மறந்து இப்போது பிராண சிநேகிதர்களாகி, இருபது வருஷ ஒப்பந்தமும் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால், இந்தியா தேசத்தில் ''பாரத மாதாவின் புதல்வர்கள்'' என்று சொல்லிக் கொள்ளும் நாம் - ஹிந்து முஸ்லிம் சகோதரர்கள் - இருபது வருஷமாக ''ஒற்றுமை ஒற்றுமை'' என்று கதறி வந்திருக்கிறோம். ஆனால், யுத்த அபாயம் நெருங்கி வந்திருக்கும் இச் சமயத்திலும் நாம் ஒற்றுமைப்படவில்லை! ''ஒற்றுமைப் பட வேண்டும்'' என்று சொல்கிறவர் மீது சண்டை துவக்குகிறோம்! நாமல்லவா கெட்டிக்காரர்கள்?

- என்ன சேதி

### புலுஸு சாம்பமூர்த்தி

இந்தக் ''கல்கி'' இதழின் அட்டையை அலங்கரிக்கும் ஸ்ரீ புலுஸு சாம்பமூர்த்தி 1921-ம் வருஷத்திலிருந்து இந்தியாவின் பூரண சுதந்திரத்தையும், குடியரசு ஆட்சி முறையையும் வற்புறுத்தி வந்தவர். காங்கிரஸ் பூரண சுதந்திர இலட்சியத்தை ஒப்புக் கொள்ள வேண்டுமென்று தீவிரக் கிளர்ச்சி செய்தவர். தேச சேவையில் பலமுறை சிறை புகுந்து மகத்தான கஷ்டங்களை அநுபவித்தவர். சென்னைச் சட்டசபையின் அக்கிராசன பதவியை அவர் எவ்வளவு திறமையுடனும் கௌரவத்துடனும் வகித்தார் என்பது பிரசித்தமான விஷயம். சமீபத்தில் ஸ்ரீ சாம்பமூர்த்தி, ராஜாஜியுடன் சேர்ந்து தமிழ்நாட்டிலும் மலையாளத்திலும் சுற்றுப் பிரயாணம் செய்து வந்தார். ''இந்தியா சுதந்திரம் பெற்ற நாடு என்பதாகவே பாவித்துக் கொண்டு நாம் ஜப்பான் படையெடுப்பை எதிர்க்க ஆயத்தமாக வேண்டும்'' என்பது அவருடைய கட்சி. சுயராஜ்யம் அடியிலுள்ள கிராமத்திலிருந்து மேலே வளர்ந்து வர வேண்டும் என்பதும், ஒவ்வொரு பிரதேசத்துக்கும் தனித்து நிற்கவோ, சேர்ந்து வாழவோ உரிமை உண்டு என்பதும் அவருடைய அபிப்பிராயங்கள்.

- அட்டைப் பட விளக்கம்




### வெப்பத்திலும் தண்மை

சூழ்நிலையின் வெப்பம் ஏறின போது அதனைத் தொடர்ந்து மனிதனுடைய உடலின் உஷ்ணநிலை அதிகப்படாமல் தணித்துக் கொள்வதற்கு மூன்று சாதனங்கள் உண்டு. நாம் வசிக்கும் வீடு, போர்த்தும் உடை இவைகளைக் கவனிப்பது முதலாவது சாதனம். ஜன்னல்களைத் திறந்தும் வேறு வழிகளைத் தேடியும் வீட்டின் உஷ்ண நிலையை ஓரளவு தணித்துக் கொள்ளலாம். நாம் போர்த்தும் உடைகளைத் தக்கவாறு அதிகப்படுத்துவதும் குறைப்பதும் மிகவும் முக்கியமான விஷயம். இதைக் கவனியாமல் சில தாய்மார்கள் கைக் குழந்தைகளைக் கஷ்டப்படுத்துகிறார்கள். உடையைத் தாமே கழற்றி விடக் குழந்தைகளுக்கு முடியாது. வெப்பத்தைத் தணிக்க இடம் கொடுக்காமல் அனாவசியமாக உடைகள் போட்டும் போர்வை போர்த்தியும் குழந்தைகளை இம்சிக்கிறார்கள்.



உடலில் இடைவிடாமல் உண்டாகும் உஷ்ணம் இரத்த ஓட்டத்தினால் தோலண்டை வந்து தணிகிறது. தோலுக்கு அடுத்த பாகத்தில் இருக்கும் மயிரிழை

போன்ற குருதிக் கால்களில் இரத்தம் ஓடி வெளிப்புறத்துக் குளிர்ச்சியினால் ஓரளவு உஷ்ணம் தணிகிறது.

தானாகவே சூடு தணிவதல்லாமல் அதிக வேகமாக வெப்பம் தணிவதற்காக வேர்வை நீர் உண்டாகி, அது காற்றில் உலர்ந்து, சூடு உடனே தணிகிறது. திரவப் பொருளை ஆவியாக்கும் போது அதனி லுள்ள வெப்பம் செலவாகி உஷ்ணநிலை தணிகிறது.

வேர்வை விடுவதினால் இழந்து விடும் நீருக்கும் உப்புக்கும் பர்த்தி செய்ய வேண்டியது அவசியம். ஆகையால் தண்ணீர் குடிப்பதும் வேர்வையில் செல வழிந்து போகும் உப்புக்குப் பர்த்தியாக ஓரளவு உப்பை உணவுடன் உட்கொள்ளு வதும் வெப்பம் தணிவதற்கு வேண்டிய சாதனமாகும்.

எனவே உஷ்ணப் பிரதேசங்களில் உப்பு இன்றியமையாத உணவுப் பொரு ளாகும். உப்பைக் கண்டு சிலர் பயப் படுவது தவறு.

- ''அரசியல் விஷயமல்ல'' என்ற குறிப்புடன் சக்கரவர்த்தி ராஜகோபாலாச் சாரியார் எழுதிய கட்டுரையிலிருந்து சில பகுதிகள்

### காலக்ஷேபம்

*தர்ஜிஷ்டர் : இ ந் த ா, இந்தச் சட்டையை வாங்கிக் கொள். கொஞ்சந் தான் கிழிந்திருக்கிறது. ஐந்து நிமிஷத்தில் தைத்து விடலாம்.*



*பிச்சைக்காரன் : எனக்கு ஒன்றும் அவசரம் இல்லைங்க; உட்கார்ந்திருக் கிறேன்.*

**- எம். ஜே. சாமிக்கண்ணு.**



மாண்டிஸாரி அம்மையார்

டாக்டர் பெஸண்ட், டாக்டர் மாண்டி ஸாரி - இரண்டு பெயர்களும் உலகப் பிரசித்தி பெற்ற பெயர்கள். டாக்டர் பெஸண்டு அயர்லாந்தில் பிறந்தவர். இந்தி யாவை ஞானத்தாய் நாடாகக் கொண்டு வாழ்நாளெல்லாம் தொண்டு செய்தவர். அவருடைய ஞாபகார்த்தமாக அழகிய அடையாற்றங்கரையில் ''பெஸண்ட் திய ஸாபிகல் ஸ்கூல்'' நடந்து வருகிறது. இந்தப் பள்ளிக்கூடத்தில் குழந்தைகளைப் பரீட்சை பாஸ் செய்யும் இயந்திரங்களாக நடத்துவதில்லை. அறிவும் ஆத்மாவும் உள்ள மனிதக் குழந்தைகளாக நடத்து கிறார்கள். உபாத்தியாயர்களும் பிள்ளை களும் அண்ணன் தம்பிகளைப் போல் பழகுகிறார்கள். ஒவ்வொரு குழந்தையை யும் தனிப்படக் கவனித்துக் கொள்கி றார்கள். ஸ்ரீ ஜி. எஸ். அருண்டேலும், ஸ்ரீமதி ருக்மணி தேவியும் நடத்திவரும் இந்த அரிய கல்வித் தொண்டுக்கு எதிர் பாராத பேருதவி ஒன்று இந்த யுத்தத்தினால் கிடைத்தது. டாக்டர் மாண்டிஸாரி என்னும் இதாலிய மூதாட்டி, குழந்தைகளுக்குக் கல்வி புகட்டப் புதிய முறையைக் கண்டு பிடித்து உலகப் பிரசித்தி அடைந்தவர். அவர் அடையாற்றில் தங்கித் தமது புதிய போதனா முறையின் மேன்மையை நேரிலேயே நிரூபித்துக் காட்டி வருகிறார். ''பெஸண்ட் தியஸாபிகல் ஸ்கூல்'' மாணவ, மாணவிகளுக்கு அடையாறு கலா க்ஷேத்திரத்தில் சங்கீதம், நடனம் முதலிய கலைகள் பயிலும் வசதியும் உண்டு. பள்ளிக்கூடமும், கலா க்ஷேத்திரமும் நாளது ஜூன் மாதக் கடைசியில் திறக்கப்படு கின்றன.

# ஹிப்னாடிஸ்ட்



சதுரமாய் பிரெட் ஸ்லைஸ் அளவுக்கு இருந்தது ஸ்விட்ச். அழுத்தினேன். உள்ளே டிங் டிடிங் கேட்டது. சாதாரணமாக மணி சப்தம் கேட்டு, உள்ளேயிருந்து ஆள் வந்து கதவைத் திறக்கக் குறைந்தது இருபது விநாடிகளாவது ஆகும். ஆனால் அழைப்பு மணியிலிருந்து நான் விரலை எடுப்பதற்கு முன்பாகவே பட்டென்று கதவு திறந்து, ''யெஸ்?'' என்றதும், தூக்கிவாரிப் போட்டு ஒரு படி இறங்கி விட்டேன்.

அவருக்கு அறுபதை நெருங்கும் வயது. அழகான நரை. சதுரமான முகம். இரண்டு விரற்கடை அகலத்திற்கு மீசை. அதுவும் நரை. கன்ன மேடுகள்.

'' ஐ'ம் கர்னல் வெங்கடேஷ்.. நீ? கம் இன்...''

கதவைத் திறந்து பிடித்த ஜரூர், உள்ளே வா என்றது. நுழைந்தேன்.

என் பெயர் சொன்னேன்.

''காவ்யா இல்லை?''

''இல்லை, மியூஸிக் க்ளாஸுக்குப் போயிருக்கிறாள். ஓ, அவள் சொன்ன யங் மேன் நீதானா? என் பெண்ணைக் காதலிக்கிறாயாமே?''

''அ... ஆமாம்...''

''உட்கார்...'' குரலில் ராணுவ அழுத்தம். சாம்பல் நிற சோபா. அமர்ந்தேன்.

''காவ்யா எப்பொழுது வருவாள்?''

''அவள் எதற்கு? என்னைப் பார்க்கத் தானே வந்தாய்?''

அவருடைய கண்கள் காவ்யாவினுடையது போலப் பெரிதாயிருந்தன. ஆனால் இதில் மான் இல்லை. புலி இருந்தது.

''ஹிப்னாடிஸத்தைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?''

திடுதிப்பென்ற கேள்வி.

''இதுவரை ஒன்றும் நினைக்கவில்லை...'' என்றேன்.

தொடையில் தட்டிச் சிரித்தார். சிரிப்பலைகள் என் எலும்பு வரை அதிர்ந்தன. அலமாரியைக் காட்டினார். கண்ணாடிச் சிறையில் சென்னை டெலிபோன் டைரக்டரிகள் போல தடி தடியாய்ப் புத்தகங்கள்.

''எல்லாம் ஹிப்னாடிஸம் பற்றியவை. அந்த நூறு புத்தகத்தில் ஆறு நான் எழுதியவை... ஆப்பிள் சாப்பிடுகிறாயா?''

ஆப்பிள் எனக்குப் பிடிக்காது என்று தெரிந்துதான் கேட்கிறாரா?

வேண்டாம் என்று தொண்டையில் வார்த்தை அமைத்தேன். ஆனால் 'ஓ, சாப்பிடுகிறேன்' என்று என் குரல் அதை மொழி பெயர்த்தது.

டப்பாவிலிருந்து செக்கச் சிவந்த ஆப்பிளை எடுத்தார். இடதுகையில் உருட்டிக் கொண்டே என்னைப் பார்த்தார். குடைந்து குடல் வரை ஊடுருவும் பார்வை. வலது கையில் சிறு கத்தி. ஆப்பிளின் தோலைச் சீவ ஆரம்பித்தார்.

''பென்சில் சீவுகிற மாதிரி சர் சர் என்று சீவித் தோலை எறிவது எனக்குப் பிடிக்காது.. இதிலும் ஒரு நேர்த்தி வேண்டும்..''

மிகக் கூரான கத்தி. ஷேவ் செய்கிற மாதிரி ஆப்பிளை வருடியது. அதன் சிவப்புத் தோல் அப்படியே அலாக்காகப் பிய்ந்து போகாமல், சுருள், சுருளாகக் கழன்றது. தோலின் உட்புறத்தில் ஆப்பிளின் பகுதி வீணாக ஒட்டிக் கொள்ளாமல் மிகத் துல்லியமாகத் தோலை மட்டும் சீவியெடுக்கிறார்! அறுபது வயதுக்காரருக்கு விரல்கள் கூட நடுங்கவில்லை!

ஆப்பிள் துண்டங்கள் என் வாயை அடைத்திருந்த போது, ''ராமநாதன் பற்றி என் மகள் சொன்னாளா?'' என்றார்.

''ம்'' என்று தலையை மட்டும் ஆட்டினேன்.

''கிருஷ்ணகுமார் பற்றி?''

இன்னொரு தலையாட்டல்.

''அந்த இரண்டு பேரும் உன்னைப் போலத்தான் வந்தார்கள். காவ்யாவை



உயிருக்கு உயிராய்க் காதலிப்பதாய்ச் சொன்னார்கள். காதலுக்காக உயிரையே தருவோம் என்றார்கள். எப்படி நம்புவது? பேசாமல் உயிரையே எடுத்துப் பார்த்து விட்டேன்...''

அவர் பார்வை என் விழிகளை விட்டு அகலவேயில்லை. வயிற்றில் எனக்கு வெடி குண்டு.

''உன்னை விட இளமையாய் இருந்தார்கள். பார்க்கிறாயா அவர்களை?''

தலையசைத்தேன்.

''என் ரூமிற்கு வா...''

என் கைப்பிடித்து அழைத்துப் போனார். எக்ஸ்கர்ஷனில், மச்சரின் கையை விட்டு விலகாத சிறுமி போல நடந்தேன். மாடிப்படிகள். மரக்கதவு. தள்ளித் திறந்தார்.

''உள்ளே வா...''

ஆணை.

நுழைந்தேன். சுகந்த வாசம். பிரவுன் நிறக் கவர்கள். ஒருபுறம் முழு அகலக் கண்ணாடி. தரையில் பிரவுன் கார்ப்பெட். மஞ்சள் வெளிச்சம். அடர்த்தியான பிரவுன் நிறத்தில் உயர நாற்காலி.

''உட்கார்...''

இன்னொரு ஆணை. நாற்காலியில் பொருந்தினேன். கண்ணெதிரே சுவரில் ஆள் உயரத்திற்கு ரைஃபிள்.

''ஆர்மி ரைஃபிள்'' என்றார், கர்னல். ஒற்றைக் கையால் தூக்கித் தோளில் வைத்து விளையாட்டாய்க் குறிபார்த்தார் - என்னை.

''ஆர்மியிலிருந்த காலத்திலிருந்தே வேட்டை என்றால் எனக்குப் பிரியம், இளைஞனே... கரடிகளைக் கொன்றிருக்கிறேன். புலிகளைச் சுட்டு வீழ்த்தியிருக்கிறேன். காட்டெருமையைப் பலி வாங்கியிருக்கிறேன். அதெல்லாம் அப்போது. இப்போது? காதலிக்கிறேன் என்று சொல்லிக் கொண்டு வரும் இளைஞர்களை...''

மின்னல் நெஞ்சைக் குடைந்தது.

''ராமநாதனையும், கிருஷ்ணகுமாரையும் இதே ரூமிற்குத்தான் கூட்டி வந்தேன். இதே நாற்காலியில் தான் உட்கார வைத்தேன். அப்புறம் என்ன செய்தேன் என்று பார்க்க விரும்புகிறாயா?''

டக், டக் என்று ஷூ முனை, சுவரை நெருங்கி அழுத்தினார். பொய்ச் சுவர். ஒரு புறமாகத் திறந்தது. உள்ளே ஆளுயர அலமாரி.

அலமாரியில் அவர்கள் நின்றிருந்தார்கள். இரண்டு பேரும் இளைஞர்கள். விறைப்பாய், பலகை மாதிரி நின்றிருந்தார்கள். ஆடவில்லை, அசையவில்லை. இரண்டு கைகளையும் இருபுறமும் தொங்கப் போட்டு, கண்கள் இலக்கில்லாத இடத்தை நேர்ப்பார்வை பார்த்துக் கொண்டு...

''இது ஆறு மாத உடல். இதற்கு எட்டு மாதம் ஆகிறது. நம்ப

அஞ்சனா மைக்கேல்ராஜ்



## பாலம்

●● ஆங்கில நாவல்களும் தமிழ் நாவல்களும் என்னிடம் நிறைய உள்ளன. தேவைப்படுவோருக்கு விற்று விடத் தயார்.

– பி. வி. சீதாராமன்,
9, பத்மநாப
அய்யர் தெரு,
வில்லிவாக்கம்,
சென்னை – 600 049.

●● பல்வேறு பத்திரிகைகளின் முதல் இதழ்களைச் சேகரிப்பது என் ஹாபி. (மலர் : 1; இதழ் :1) இதுவரை 445 முதல் இதழ்கள் வைத்திருக்கிறேன். அன்பர்கள் தங்களிடம் உள்ள முதல் இதழ்கள் பற்றி விவரம் தெரிவித்தால் என்னிடம் இல்லாதிருப்பின் பெற்றுக் கொள்ளத் தயாராயிருக்கிறேன்.

– எம். குமார்,
15/1, V. K. WADI
BOMBAY 400 017.

●● எங்கே இருக்கிறீர்கள், நண்பர்களே? 1928 முதல் 33 வரை அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் என்னுடன் படித்த கே. வி. சுப்புரத்னம், ஜி. வி. சுப்பிரமணியன், எஸ். ராமநாதன் ஆகியோருடன் மீண்டும் தொடர்பு கொள்ள ஆவல்.

– ஏ. என்.
ராமச்சந்திரன்,
K 7, டர்ன்புல்ஸ்
சாலை,
நந்தனம்,
சென்னை - 600 035.

●● 1931 முதல் 60 வரையிலான திரைப்படங்களைப் பார்க்கும் வாய்ப்பை ஏற்படுத்தவும் அக்காலப் படங்களில் இடம் பெற்ற பாடல்களைக் கேட்கவும் சென்னை நகரில் ஒரு சங்கம் அமைக்கத் தேவை உள்ளது. இதில் ஆர்வமுள்ளவர்கள் தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க முகவரி :

– ம. சர்வேஸ்வரன்,
71, புதுவெள்ளாளர்
தெரு,
கோடம்பாக்கம்,
சென்னை – 600 024.

●● காட்டுப் பாக்கம் விவசாயப் பண்ணையில் காளான் வளர்ப்பு பற்றிப் பயிற்சி பெற்றுள்ளேன். ஆனால் நான் உற்பத்தி செய்யக்கூடிய காளான்களை யாரிடம் எப்

முடியவில்லை உன்னால். கிட்டே வந்து தொட்டுப் பார்க்கிறாயா? உள்ளே எலும்பு இல்லை. சதை இல்லை. எல்லாம் பஞ்சு. கெட்டித்த பஞ்சு... பாடம் பண்ணி விட்டேன். ஒரு தையல் மார்க்கைக் கூட உன்னால் கண்டுபிடிக்க முடியாது. என் வேலை எப்போதும் சுத்தம்.''

கதவுகளை மூடினார். உறைந்து உட்கார்ந்திருந்தேன்.

''இதே நாற்காலியில் உட்கார வைத்துத் தான், இதே கத்தியால்தான் சீவினேன். வலி கிடையாது. பொட்டு வேதனை கிடையாது. என் கண்களைப் பார்த்துக் கொண்டேயிரு போதும், உனக்கும் வலி தெரியாது..''

கிட்டே நெருங்கினார். எழுந்து ஓட வேண்டும் போல மனது துடித்தது. அறிவு வற்புறுத்தியது. பசை போட்டு ஒட்ட வைத்தது போல் அசைய முடியாமல் தவித்தேன். நானே எனக்குப் பாரமாகி விட்டேன். கால்கள் ஒத்துழைக்க மறுத்தன.

கத்தியை அவர் என் நெற்றியில் வைத்தார். அதன் கூர் முனை மெல்லப் பதிந்த போதும் என்னால் நிமிர முடிய வில்லை. இதோ கீறப் போகிறார்!

கதவு டப்டப் என்று தட்டப்பட்டது.

அரண்டு பின்வாங்கினார். கத்தியை பாக்கெட்டினுள் போட்டார். கதவு திறந்தார். ''டாடி.. இங்கே என்ன செய்கிறீர்கள்?'' என்றாள் காவ்யா.

''காவ்யா, மை டார்லிங்..''

காவ்யா பிடியில் இருந்தாள். அவர் எனக்கு முதுகு காட்டித் திரும்பியதும், இத்தனை நேரம் மானசீகமாக என்னைக் கட்டிப் போட்டிருந்த நைலான் கயிறுகள் பட்பட் என்று அறுந்தன. நாற்காலியிலிருந்து பதறி எழுந்தேன்.

''காவ்யா... இந்த இளைஞனுக்கு என் வேட்டை வெற்றிகளைக் காட்டிக் கொண்டிருந்தேன்...''

காவ்யா என்னைப் பார்த்துப் புன்னகை செய்தாள் வசீகரமாக.

''யூ லைக் மை டாடி?''

அவர்கள் இருவருக்கும் நடுவில் எக்ஸ்பிரஸ் ரயில் போல் நுழைந்தேன். படிகளை நான்கு நான்காகக் கடந்து இறங்கினேன். காற்றை விட வேகமாக வெளியேறினேன்.

"முட்டாள்! அவ்வளவுதானா உன் தைரியம்?'' காவ்யா வெடித்தாள்.

படி விற்பது? யோசனைகள் தெரிவிக்க இயலுமா?

- க. பிரேம்குமார்,
c 37, 4 வது தெரு,
அண்ணாநகர், செங்கல்பட்டு.

●● தியாகராஜர் ஆராதனை விழாவில் ''ஸ்ரீ தியாகராஜா - 12'' என்ற சிறப்பிதழ் வெளியிட்டேன். விலை ரூ. 5/- தபாலில் பெற விரும்புவோர் எழுதவும்.

- திருவைக்குமார்,
7, சித்திரக்குளம் வடக்கு வீதி,
சென்னை - 600 004.

●● பாசிமணியில் தேர் செய்திருக்கிறேன். அதில் வைப்பதற்கு ஏற்ற சிறிய பொம்மைகள் (கிருஷ்ணன் அல்லது அர்ஜுனன் மாதிரி) கிடைக்குமிடம் தெரிவிப்பீர்களா?

- இந்திரா,
7, கோவில் தெரு,
கீழ்ப்பாக்கம்,
சென்னை - 600 010.

●● ராஜஸ்தான் மாநிலம் ஜோத்பூர் நகரில் தமிழர்களாகிய நாம் பல நூற்றுக் கணக்கில் வசித்தும், மற்ற பல வட இந்திய நகரங்களில் உள்ளது போல் இங்கு தமிழ்ச் சங்கம் அமையவில்லையே? எனவே ஜோத்பூர் தமிழர்கள் பின்வரும் முகவரிக்கு எழுத வேண்டுகிறேன்.

- ஆர். ராகவன்,
RAMANUJAKOT FATHE SAGAR,
JODHPUR - 342 001

●● சொந்த இடம் மெயின்ரோடில் உள்ளது. கடைகள் கட்டி பிஸினஸ் செய்தால் நன்றாகச் சம்பாதிக்கலாம். பங்குதாரராகவோ அல்லது முழுப் பொறுப்பு ஏற்கவோ விரும்புகிறவர்கள் தொடர்பு கொள்ளவும்.

- இராம. பாஸ்கர்,
டெய்லர்,
முகந்தனூர் (அஞ்சல்),
அம்மையப்பன் (வழி)
613 701.

●● படிக்காத, ஆதரவற்ற, ஏழைப் பெண்களுக்கு உபகாரச் சம்பளத்துடன் ஆறு மாதம் தொழிற்பயிற்சி தந்து பிறகு நிரந்தர வேலைக்கும் ஏற்பாடு செய்கிறோம். வெளியூரிலிருந்து வரும் பெண்களுக்குத் தங்குவதற்கு இட வசதி உண்டு.

- மானேஜிங் டைரக்டர்,
அரவிந்த் அட்ஹைஸிவ்ஸ்,
12, சீனிவாச பெருமாள் சன்னதி,
3வது தெரு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிர்வாகம் பொறுப்பேற்காது.)

''என் அப்பாவைப் பற்றி உனக்குத் தெரியுமா, தெரியாதா? பெரிய ஹிப்னாடிஸ்ட். ஹிப்னாடிஸ மயக்கத்தில் உன்னை உட்கார வைத்துப் பயமுறுத்தியிருக்கிறார். சுவருக்குள் பதிந்திருந்த அலமாரியில் ராமநாதன் பார்த்தேன், கிருஷ்ணகுமார் பார்த்தேன் என்கிறாயே.. எல்லாம் உன் கற்பனை. அப்படியொரு பிரமையான தோற்றத்தை உனக்கு உருவாக்கியிருக்கிறார். அங்கே நின்றிருந்தது அவருடைய உதவியாளர்களாகக் கூட இருக்கலாம். எல்லாம் ஒரு செட்டப்...''

''ஏன்? எதற்கு? ஏன்?'' - அவள் என்னைத் தொட வந்த போது கூட விலகி உட்கார்ந்தேன்.

''என்னைக் கல்யாணம் செய்து கொள்கிறவன் தைரியசாலியாக இருக்க வேண்டும் என்பது அப்பாவின் பிடிவாதம். அதற்கான டெஸ்ட் தான் அது. ராமநாதன் ஓடிப் போனான். கிருஷ்ணகுமார் காணாமல் போனான்.. நீயுமா அப்படி? எல்லாம் ஹிப்னாடிஸ மாயை என்று உனக்குப் புரியவில்லையா?''

பெரிய விழிகளை உருட்டிக் கேட்டாள்.

''நீ மட்டும் வந்து கதவைத் தட்டவில்லையென்றால், என்னைக் கூறு போட்டிருப்பார்...''

''அவ்வளவு தூரம் உன்னை பயமுறுத்தியிருக்கிறார். என் கண்களைப் பார்த்துச் சொல். என்னை நம்புகிறாயா, இல்லையா?''

கண்களைப் பார்த்தபின், அவற்றின் காதலைப் பார்த்தபின் வேறு வார்த்தை வரவில்லை. ''நம்புகிறேன்'' என்றேன்.

''அப்படியானால் அப்பாவை மறுபடியும் சந்திக்க வா. அவருடைய மிரட்டலுக்குப் பயப்படாதே. தைரியமாக மார்பை நிமிர்த்திக் 'காதலிக்கிறேன்' என்று சொல்... சொல்வாயா?''

''சொல்வேன்'' என்றேன், அவள் கையை அழுத்தி.

''நீயா... வா... வா... வா...'' என்றார் கர்னல் வெங்கடேஷ்.

''காவ்யா வெளியே போயிருக்கிறாள். வா.. பேசிக் கொண்டிருப்போம்...''

மறுக்க முடியவில்லை. நுழைந்தேன்.

சோபாவின் மூலையில் ஒரு பாமரேனியன். புஸ் புஸ் என்ற உடம்பை வளைத்து, முகத்தை வயிற்றில் அழுத்திப் படுத்திருந்தது.



''என் மனைவியை ஜவுளிக் கடைக்குக் கூட்டிக்கிட்டுப் போனதும், நான் டேபிளைக் கெட்டியாப் பிடிச்சுக்குவேன்!''

''எதுக்கு?''

''அவளுக்குப் பிடிச்ச டிசைன்ல புடைவை கிடைச்சுட்டா, நிம்மதிப் பெருமூச்சு விடுவாளே, அதுல பறந்துடாம இருக்கத்தான்!''

– சேலம் நீலமேகம்



சில சமயங்களில் இரத்தத்தில் சர்க்கரை அளவோடு இருந்து, சிறுநீரில் மட்டும் மிகுதியாக இருக்கும். இது நீரிழிவு அல்ல. இதற்குக் 'கிளைகோ சுரியா' என்று பெயர். அனுபவமற்ற டாக்டர்கள் இதற்கு இன்சுலின் மருந்துகளைக் கொடுத்தால் விபரீத விளைவுகள் ஏற்படும். ஒரு நோயாளிக்கு அவ்வாறு கொடுத்ததில் இரத்தத்தில் சர்க்கரையின் அளவு மிகவும் குறைந்து வலிப்புகள் ஏற்பட்டன. உடனே அவர் மூளை சம்பந்தமான பல சோதனைகளுக்குட்படுத்தப்பட்டு மேலும் வேதனைகளுக்குள்ளானார். நீரிழிவு நிபுணரின் கவனத்துக்கு இது வந்ததும் எல்லா மருந்துகளும் நிறுத்தப்பட்டன. உடனே அவர் சகஜ நிலைக்குத் திரும்பி விட்டார்.

ஆதாரம் : டாக்டர் வி. மோகன்
- 'ஹிந்து' கட்டுரை
தகவல் : அ. ஷண்முகசுந்தரம்

''உட்கார்.''

உட்கார்ந்தேன்.

''ஆப்பிள் சாப்பிடுகிறாயா?''

சிவப்பு ஆப்பிள். கூரான சிறு கத்தி. சுருள் சுருளாகத் தோல் சீவல்.

''கொஞ்சம் அழுத்தி வெட்டி விட்டால் கூட ஆப்பிளின் ஷேப் கெட்டு விடும்...''

பார்வையை என்னிடமிருந்து விலக்காமலேயே ஆப்பிளைத் துண்டம் போட்டார்.

''என் நாயைப் பிடித்திருக்கிறதா?''

''ம்.''

''தொட்டுப் பார்...''

தயங்கித் தொட்டேன். நாய் சிலிர்க்கவில்லை. நான் வந்ததிலிருந்தே அது சற்றும் அசையாமல் ஒரே போஸில் படுத்திருந்ததை அப்போதுதான் உணர்ந்தேன். அதன் உடல் சில்லென்றிருந்தது.

''செத்துப் போய் ஆறு மாதமாகிறது. பஞ்சு வைத்து அடைத்திருக்கிறேன். ஆனால் உன்னால் ஒரு தையலைக் கூட கண்டுபிடிக்க முடியாது. என் வேலை எப்போதும் கச்சிதம்..''

நாயை மடியில் வைத்து ஆராய்ந்தேன். உண்மைதான். ஒரு தையல் மார்க் கூட இல்லை. கெட்டியாக, திண்ணென்றிருந்தது.

கிலி என்னைத் தாக்கியது.

''நாய் மட்டுமில்லை. இன்னும் இரு அயிட்டங்களைக் காட்டுகிறேன், என்னுடன் வா...''

போகாதே போகாதே என்று கால்களைக் கெஞ்சினேன். பயனில்லை. எழுந்து விட்டன. அவரைப் பின் தொடர்ந்தன.

மாடிப்படிகளில் மறுப்பில்லாமல் ஏறின.

அவருடைய அறைக் கதவைத் தள்ளித் திறந்தார்.

''அந்த நாற்காலியில் உட்கார்..''

கால்கள் என் கட்டுப்பாட்டை மீறி நடந்தன. நாற்காலியில் என்னை அமர்த்தின.

''அலமாரியில் இன்னொரு இடம் காலியாக இருக்கிறது. அப்படி இருக்கலாமா?'' என்றார்.

''கூடாது'' என்றேன்.

''குட்....'' கத்தியை தன் விரல் நுனியால் அழுத்தினார். ஒரு ரத்த முத்து. காட்டினார். ''வலிக்கவில்லை...''

நெருங்கினார். அசையாமல் உட்கார்ந்திருந்தேன்.

கத்தியின் கூரான நுனி என் நெற்றியின் உச்சியைத் தொட்டது.

''வலிக்காது. ஒரு பொட்டு வேதனை இருக்காது...''

கத்தியில் அழுத்தம் கொடுத்தார்.

இந்தத் தடவை யாரும் கதவைத் தட்டவில்லை.

# சாலை அமைப்போம்

சேர்மன் ஐயா சொன்னதைக் கேட்டுத் தலைமை ஆசிரியர் பலமாகத் தலை ஆட்டினார்.

''ஐயா என்ன சொல்றீங்கன்னா நல்லா வளர்ந்தியான பையங்களா ஒரு எண்பது பேரைக் கமுதாருக்கு அனுப்பி வைக்கணும். நாலு நாள் கேம்ப் போட்டு, அந்த ரோடுல மண் வேலை செஞ்சு அதைச் சீர்படுத்தணும். விஷயம் அவ்வளவுதானுங்களே... நிம்மதியாப் போயிட்டு வாங்க... எனக்கு எவ்வளவு உபகாரம் செஞ்சிருக்கீங்க... என்னவெல்லாம் செய்யப் போறீங்க... இதை நான் செய்ய மாட்டேனா?'' என்றார் வாயெல்லாம் பல்லாக.

''யூனியன் ஃபண்டுல பணம் இல்ல. எலெக்ஷன் வேற வருதுங்களா... அதான் உங்க உதவி வேண்டி வந்தேன். ரொம்ப சந்தோஷம்... வரேன்.''

சேர்மன் ஐயா ஜீப்பில் ஏறிப் புறப்பட்டார்.

''மாணவச் செல்வங்களே! 'அணி ஓரம் மண் சுமந்தது; அகம் மகிழ்ந்தார் ராமபிரான்'னு சொன்னது போல நீங்கள்லாம் ஒண்ணாச் சேர்ந்து, கடுமையான வெயிலைக் கூடப் பொருட்படுத்தாம, பாழ்பட்டுக் கிடந்த கமுதூர்ச் சாலையைச் சீர் பண்ணி, உதவி பண்ணி இருக்கீங்க... உங்களையெல்லாம் பாராட்டி, வாழ்த்தி நற்சான்றிதழ்கள் வழங்குவதில் மிகவும் பெருமை அடைகிறேன்.''

பலத்த கைத்தட்டல்களுக்குப் பின், சாலைச் சீரமைப்புப் பணியில் கலந்து கொண்ட அனைவருக்கும் சான்றிதழ்கள் வழங்கிப் புறப்பட்டார் சேர்மன் ஐயா.

ஜீப் புறப்பட்டு ஓடிக் கொண்டிருக்கையில், பக்கத்திலிருந்த யூனியன் என்ஜினியரிடம் சொன்னார் :

''விஷயம் எவ்வளவு சுளுவா முடிஞ்சிடுச்சி பார்த்தீங்களா? நாளைக்கே ஓவர்சீரை அனுப்பிக் கமுதூர் ரோடுல மண் வேலைக்கு மெஷர்மெண்ட் எடுக்கச் சொல்லுங்க. அப்படியே சாலைச் சீரமைப்பு எஸ்ட்டிமேட்டையும் போட்டு, பில்லோடு டிவிஷனல் என்ஜினியர் ஆபீஸுக்கு அனுப்பி வைங்க. மற்றதை நான் கவனிச்சுக்கிறேன்.''



''உங்களுக்கிருக்கிற இந்த மாதிரியான ராஜதந்திரத்துக்கு நீங்க மந்திரியாவே வருவீங்க. உங்க மாதிரியானவங்களை நம்பித்தான் நாங்க இருக்கோம்...'' தொப்பை குலுங்கச் சிரித்தபடி சேர்மன் ஐயாவின் கையைக் குலுக்கினார் யூனியன் என்ஜினியர்.

– இமயவன்

# நுரையீரல் ஒரு டென்னிஸ் கோர்ட்!

!! மனித மூளை இரு பிரிவுகளைக் கொண்டது. ஒரு பிரிவின் பிரதிபிம்பத்தைப் போல் மற்ற பிரிவு அமைந்திருக்கும். வலது பக்கப் பிரிவு, உடம்பின் இடது பக்கத் தசைகளின் ஆணைகள், மற்றும் செய்திகளைப் பெற்று இயங்கும். அதே போல் மூளையின் இடதுபக்கம் உடலில் வலது பக்க இயக்கத்துக்கு உதவி, கட்டுப்படுத்தும்.

!! சராசரி மனித மூளையின் எடை, பிறந்தது முதல் பருவமடையும் வரை மும்மடங்கு அதிகரிக்கும். ஆண்களது மூளையின் எடை சராசரி 1.4 கிலோவும் பெண்களது மூளை சராசரியாக 1.3 கிலோவும் இருக்கும்.

!! மூளையின் அளவுக்கும் (பரிமாணம்) புத்திசாலித்தனத்துக்கும் இடையே எவ்வித சம்பந்தமும் கிடையாது.

## அட, அப்படியா?

!! வலது கைப் பழக்கமுள்ளவர்களின் (அதாவது பெரும்பான்மையினர்) மூளையின் இடது பக்கம், எழுதுவது, படிப்பது, பேசுவது போன்ற திறன்களைக் கட்டுப்படுத்துகிறது; இவர்களது மூளையின் வலப்புறம் கற்பனை, கலைத்திறன் போன்றவற்றை நிர்ணயிக்கிறது. இடதுகைப் பழக்கமுள்ளோருக்கு இது நேர்மாறாய் அமையும். அதாவது மூளையின் இடப்புறம் கற்பனை, கலைத் திறனையும் வலப்புறம் எழுதுவது படிப்பது போன்றவற்றையும் கட்டுப்படுத்தும்.

!! முழு வளர்ச்சியுற்ற மனித உடலில் சராசரியாக 650 தசைகள், நூறு மூட்டுகள் 1,00,000 கி.மீ. ரத்த நாளங்கள், 13,000 மில்லியன் நரம்பு செல்கள், 206 எலும்புகள் ஆகியவை இருக்கும். எலும்புகளுள் கிட்டத் தட்ட பாதி அளவு கைகளிலும் கால்களிலுமே உள்ளன.

!! நமது நுரையீரலின் பரப்பளவு ஒரு டென்னிஸ் கோர்ட்டின் பரப்பளவுக்கு நிகரானது. அதில் 1,500 மைல் நீளத்துக்கு விரியக் கூடிய 300 பில்லியன் காபிலரிகள் (சின்னஞ்சிறு ரத்த நாளங்கள்) அழகாக அடுக்கப்பட்டு அடக்க ஒடுக்கமாய் இருக்கின்றன!



!! நமது இதயம் இரு துடிப்புகளுக்கிடையே 1/6 வினாடிக்கு இயங்காமல் நிற்கிறது - அதாவது நம் வாழ்க்கையின் 1/6 பகுதி நேரம் நம் இதயம் இயங்குவதில்லை.... நம்ப முடிகிறதா?

!! சராசரி கண் பார்வை உள்ளோரால் 150 நிறங்களை அடையாளம் காண முடியும். வண்ணங்களை வகைப்படுத்திப் பழக்கப்பட்ட நிபுணரால் 1,00,000 விதமான வண்ண வேறுபாடுகளை உணர முடியும்.

தொகுப்பு :

உதய்லால்

☛ மனித மூளை



உண்மையாகவா? எத்தனை நாட்கள் எத்தனை
பேர்கள் கேட்டிருப்பார்கள் இந்த கேள்வியை!
'டிவிஎஸ்' நிர்வாகத்தில் மதுரை பேருந்து வசதி
இருந்த காலம் அது! பேருந்துகளின் வருகை
புறப்பாடுகளையொட்டி கைக்கடியாரங்களை
சரி செய்து கொள்வார்களாம்! உண்மைதான்!
இன்றும் நேரம் தவறாமைக்கு உதாரணம்
காட்ட "அந்த நாட்களை" நினைப்பவர்கள்
ஏராளம். கட்டுப்பாடோடு கடமையுணர்வு
கொண்ட ஊழியர்களால் இது சாத்தியமாயிற்று.

காலந்தவறாமை, கட்டுப்பாடு, நேர்மை —
'டிவிஎஸ்' என்ற தொன்று தொட்டு வரும்
பாரம்பரியத்தின் அடித்தளம்!

உபாஸனா ஃபைனான்ஸ் —— 'டிவிஎஸ்'
பாரம்பரியத்தை அடையாளம் காட்டும்
நிறுவனம்!

**இதுதான் உபாஸனா!**

கடந்த ஏழு வருடங்களாக குத்தகைப் பணிகள்,
தவணைக்கொள்முதல், நிதியுதவி சேவைகளில்
ஈடுபட்டு வரும் நிறுவனம். கடந்த ஒரு
வருடத்தில் நிகரலாபத்தில் 421% உயர்வையும்,
ஒதுக்கீடு தொகையில் 70% உயர்வும், 87%
உயர்வை நிலையான சொத்து அளவிலும், 45%
உயர்வு மொத்த வரவுகளிலும்,
டெபாஸிட்தாரர்கள் எண்ணிக்கையில் 27%
உயர்வும் சாதித்த நிறுவனம்!

இவை உன்னத பாரம்பரியத்தின் உற்சாகமான
வளர்ச்சியை பிரதிபலிக்கும் சாதனை குறியீடுகள்!

திரு சுரேஷ் கிருஷ்ணா ... சுந்தரம் பாஸ்னர்ஸ்
நிறுவனத்தின் தலைவர் மற்றும் நிர்வாக
இயக்குநர். சுந்தரம் க்ளேட்டன், டிவிஎஸ்
விர்ல்புல் நிறுவனங்களின் தலைவர். பல
'டிவிஎஸ்' நிறுவனங்களின் இயக்குநர்கள்
குழுவில் அங்கம் வகிப்பவர்.

இவரே 'உபாஸனா'வின் தலைவரும் கூட!

இதனால் ....

'டிவிஎஸ்' குடும்பத்தினருடன் தொடர்பு
கொண்ட ஒவ்வொரு செயல்பாடுகளுக்கும்
உரிய சீரிய நெறிமுறைகள் 'உபாஸனா'விலும்
தொடர்கிறது.



**உபாஸனா**
**ஃபைனான்ஸ் லிமிடெட்**
**610, மவுண்ட் ரோடு, சென்னை 600 006**
**போன்: 860437**

தொடரும் நம்பிக்கையென்னும்

'டிவிஎஸ்' பாரம்பரியம்!

Stimulus/UFL/145/92 R

# கிழக்கு வெளுத்தாச்சு



**ஆ**ரம்பத்தில் அசட்டு தர்மனாகக் காட்சியளிக்கும் ஆனந்தராஜ், தங்கையின் சாவுக்குப் பிறகு, ஆக்ரோஷ தேவாவாக மாறுகிறார்.

தம் தங்கயின் சாவுக்குக் காரணமான மந்திரியைக் கொல்ல ஆனந்த ராஜ் முயல, போலீஸ் துரத்த, எப்படியும் பழிவாங்கியே தீருவது என்று காட்டுக்குள் கூட்டாளிகளுடன் தஞ்சம் புகுகிறார்.

சந்தர்ப்ப வசத்தால் போலீஸுக்கும் கூட்டாளிகளுக்கும் திருமணச் சூழலில் இருக்கும் கிராமத்திற்குள் கைகலப்பு -

துப்பாக்கி வெடித்ததில் மாப்பிள்ளை ஃபணால்.

பெண் ஐஸ்வர்யாவின் தாத்தாவும் ஃபணால்.

ஐஸ்வர்யா (நாட்டு மருத்து வச்சியாம்) ஆனந்தராஜை நீதி கேட்டு வர, ஐஸ்வர்யாவைத் தம் தங்கையாக ஏற்கிறார்.

இப்போது ஆனந்தராஜுக்கு இரண்டு கடமை. முதலாவது மந்திரியைக் கொல்வது. இரண்டாவது புதுத்தங்கை ஐஸ்வர்யாவை மணக் கோலத்தில் பார்ப்பது.

ஆனந்தராஜைத் தேடி வரும் சி.ஐ.டி. இன்ஸ்பெக்டர் ராஜா, மூலிகை ஆராய்ச்சி என்ற போர்வையில் ஐஸ்வர்யாவைக் காதலாராய்ச்சி செய்ய -

விளைவு : ஆட்டக்கார அலுமேலுவாகச் சிலுக்கு ஆடும் கவர்ச்சி நடனத்தையும் தூக்கிச் சாப்பிடும் வகையில் ஓர் ஆட்டம் ஆடுகிறார் ஐஸ்வர்யா.

இன்ஸ்பெக்டர் ராஜா, நிச்சயதார்த்தத்தின் போது, சிநேகமாக ஆனந்தராஜைப் போலீஸில் சரணடையக் கேட்கிறார்.

கடைசியில் தங்கையின் கழுத்தில் தாலியும் ஏற... மந்திரியைப் பழியும் வாங்கி... போலீஸ் குண்டடிபட்டு ஆனந்த ராஜ் உயிர் துறக்கிறார்.

ஆனந்தராஜை ஒரு தலைக் காதலில் உருக்கும் சிலுக்கு, பாதுகாப்புக்காக வீட்டு வாசலில், ஆனந்தராஜின் ரெயின் பூட்ஸ் போலவே செட்டப் செய்து வைத்துக் கொள்வது நல்ல சிறுகதை.

வழக்கமான வசனங்கள், காட்சி அமைப்புகள், பாடல்கள். அதாவது ஆயிரமாவது மசாலாப்படம்.

— சுப்ரஜா ஸ்ரீதரன்

---



"உங்க மனைவி,
கைப்பக்குவத்தில் எது
உங்களுக்கு ரொம்பப்
பிடிக்கும்?"

"அவ 'கடகட' போடும்,
வெந்நீர்தான்...!"

— ஆர். வசந்தகுமார்



"அப்படியா!!" என்று ஆச்சரியப்பட வேண்டிய தேவையே இல்லை. உதாரணமாக 'டிவிஎஸ்' நிறுவனமான சுந்தரம் பாஸ்னர்ஸில் கதவடைப்பு, வேலைநிறுத்தம் என்ற வார்த்தைகள் உபயோகிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டதேயில்லை. யாருக்கு இதில் பெருமை! இரு கை இணைந்தால்தான் ஓசை! அன்பு காட்டும் அதிகாரிகள், ஆர்வமாய் உழைக்கும் தொழிலாளர்கள், இருசாராரையும் இணைக்கும் மனித நேயம் என்ற பந்தம்.

மனித நேயம் .... டிவிஎஸ் என்ற தொடர்ந்துவரும் பாரம்பரியத்தின் பலமான அடித்தளம்!

**இதுதான் உபாஸனா!**

கடந்த ஏழு வருடங்களாக குத்தகைப் பணிகள், தவணைக்கொள்முதல், நிதியுதவி சேவைகளில் ஈடுபட்டு வரும் நிறுவனம். கடந்த ஒரு வருடத்தில் நிகரலாபத்தில் 421% உயர்வையும், ஒதுக்கீடு தொகையில் 70% உயர்வும், 87%

உயர்வை நிலையான சொத்து அளவிலும், 45% உயர்வு மொத்த வரவுகளிலும், டெபாஸிட்தாரர்கள் எண்ணிக்கையில் 27% உயர்வும் சாதித்த நிறுவனம்!

இவை உன்னத பாரம்பரியத்தின் உற்சாகமான வளர்ச்சியை பிரதிபலிக்கும் சாதனை குறியீடுகள்!

திரு சுரேஷ் கிருஷ்ணா ... சுந்தரம் பாஸ்னர்ஸ் நிறுவனத்தின் தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர். சுந்தரம் க்லேட்டன், டிவிஎஸ் விர்ல்பூல் நிறுவனங்களின் தலைவர். பல 'டிவிஎஸ்' நிறுவனங்களின் இயக்குநர்கள் குழுவில் அங்கம் வகிப்பவர்.

இவரே 'உபாஸனா'வின் தலைவரும் கூட!

இதனால் ....

'டிவிஎஸ்' குடும்பத்தினருடன் தொடர்பு கொண்ட ஒவ்வொரு செயல்பாடுகளுக்கும் உரிய சீரிய நெறிமுறைகள் 'உபாஸனா'விலும் தொடர்கிறது.



**உபாஸனா**
**ஃபைனான்ஸ் லிமிடெட்**
**610, மவுண்ட் ரோடு, சென்னை 600 006**
**போன்: 860437**

தொடரும் நம்பிக்கையென்னும்
'டிவிஎஸ்' பாரம்பரியம்!

Stimulus/UFL/146/92 R

# அதிகாரி எங்கே! அமைச்சர் எங்கே!

## வட்டமேஜை

◆ நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்குப் பிரதமர் பேசிய கருத்துக்களை விளக்கி எழுதப்பட்ட 'பூனைக்கு மணி கட்டும் பிரதமர்' என்ற தலையங்கம் தரம். சாலைகள், மின் உற்பத்தி, நீர்ப்பாசனம் நாட்டின் அபிவிருத்திக்கு முதுகெலும்பு என்பதை உணரும் வகையில் எழுதியமைக்கு நன்றி!

மேல்பட்டி, எல். மாறன்.

◆ 'குதா கவா' பட டைரக்டர், "தென்னிந்தியர்கள் கடமையுணர்ச்சியும் கட்டுப்பாடும் மிக்கவர்கள்; அவர்களை ரொம்பப் பிடிக்கும்" என்று பாராட்டியிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம் மட்டுமல்ல; பெருமைப்படச் செய்வதும் கூட!

போடிநாயக்கனூர்,
ரா. நாச்சிமுத்து.

◆ அமிதாப்பே 'குதா கவா' படத்தைக் கடைசிப் படம் என்று ஒப்புக் கொள்ளாத போது, தாங்கள் எப்படி அதை அமிதாப்பின் கடைசிப் படம் என்று போடலாம்?

மதுரை - 18,
ஆரிப்பாளி கே. அரசக்கண்ணு

◆ 'நீதித் துறையின் தூண்களாக இரண்டு தமிழர்கள்' கட்டுரை, இரண்டு அறிவு ஜீவிகளை எங்களுக்கு இனம் காட்டியது. நாட்டின் பொருளாதாரத்திற்கு ஒரு புதிய திருப்பத்தை உண்டு பண்ணியவர்களை இதுபோன்ற கட்டுரைகள் மூலம் மக்களின் முன்வரிசைக்குக் கொண்டுவரும் தங்களுக்குப் பாராட்டுக்கள்.

மொரட்டுப்பாளையம்,
கே. கஸ்தூரி




◆ நாட்டின் நிதிப்பற்றாக் குறையைச் சமாளிக்கப் பல சிக்கன நடவடிக்கைகளை எடுப்பதென்றும் அரசு அதிகாரிகள் அடிக்கடி வெளிநாடுகளுக்குச் செல்வது தவிர்க்கப்பட வேண்டுமென்றும் இதோ கிருஷ்ணனின் பேட்டி ஒரு புறம்; சரத்பவார் கட்சி நடவடிக்கைக்காக ஐ. ஏ. எஃப். விமானத்தில் புனேவுக்கும் டெல்லிக்குமாகப் பறப்பது மறுபுறம். அதிகாரி எங்கே! அமைச்சர் எங்கே!

மதுரை - 9,
இரா. கல்யாணசுந்தரம்.

◆ 'சந்திரலேகாவுக்குக் கொடுமை : சோம்பல் முறிக் கட்டும் காவல்துறை!' கட்டுரை படித்தேன். 'சந்திரலேகாவின் முகத்தைப் பாழ்படுத்துவதுதான் குற்றவாளிகளின் நோக்கமே தவிர கொலை செய்யும் எண்ணம் இல்லை' என்று காவலரே கூறியிருப்பது குற்றத்தின் கடுமையைக் குறைக்கும் நோக்கமாகப்படுகிறதே தவிர, தாது போலீஸ் துறையின் செயல் திறனுக்குப் பெருமை சேர்ப்பதாகப் படவில்லை.

மதுரை - 16, வி. பி. மகராசி.

◆ 'நேர்முகத் தேர்வில் நடந்தது' அனுபவங்கள் கண் எதிரிலேயே நடந்தது போல் இருந்தன. அதைப் படித்ததிலிருந்து நேர்முகத் தேர்வில் எப்படியெல்லாம் சாதுர்யமாகப் பதில் கூற வேண்டும் என்பதும் புரிந்தது.

பூண்டிதீர்த்தேக்கம், ஆ. ஜீவா.

◆ 'இன்லண்ட் லெட்டர் சிறுகதை' "கொலுசே கொலுசே" நெஞ்சைத் தொடும்படி அமைந்திருந்தது.

பாண்டிச்சேரி - 1,
ஜெஹலன் ஜாஹிர்.

◆ வயதாகி ஓய்வு பெற்ற காலத்தில், அவர் மட்டுமல்ல, அவர் மதிக்கும் பொருளும் கூட உதாசீனப்படுத்தப்படும் என்ற யதார்த்த நிலைமையை எடுத்துரைத்த யதார்த்தமான சிறுகதை நாராயணனின் 'காலம்'.

திருப்பரங்குன்றம்,
டி. கே. சுப்பிரமணியன்.

◆ வ. சா. நாகராஜனின் 'விடிவெள்ளி' சிறுகதையில் இந்துவின் பாத்திரம் எனக்கும் விடிவெள்ளியாய் வெளிச்சம் தந்தது.

கொங்கணாபுரம்,
வே. செந்தில்குமார்.

◆ நாட்டுநடப்பை அழகாக அலசிய 'பாமரன்' சிறுகதை ஆசிரியர் கமலவேலனுக்குப் பாராட்டுக்கள்.

கடையால், அ. செபாஸ்டின்.

◆ "வானமே எல்லை" பட விமர்சனம் சிறப்பாக இருந்தது. ஆயினும் படத்தின் வெற்றிக்கு மற்றொரு காரணம் மரகதமணியின் இசையும், வைரமுத்துவின் பாடல்களும். அவை பற்றி ஒரு வரி கூட குறிப்பிடவில்லையே!

தக்கோலம், அ. முஸ்தபா.

# ஆசை... துன்பத்தின் பாதை!

மனித குலத்தின் பல்வேறு பிரச்னைகளுக்கும் என்ன காரணம் என்று பல்வேறு ஞானிகள் பல்வேறு காலத்தில், பலநூறு கோணத்தில் ஆராய்ந்தார்கள். ஆனால் என்ன ஆச்சர்யம்! எல்லோரும் ஒரே முடிவுக்குத்தான் வந்தார்கள். ''ஆசைப் பட பட ஆய்வரும் துன்பம்'' என்ற திருமூலர் திருமந்திரத்தையே அவருக்கு முன்னும் பின்னும் வந்த ஞானிகள் பாட்டிலும் வசனத்திலும் பல்வேறு மொழியிலும் பகர்ந்து போயினர்.

துன்பத்துக்கு ஆசை காரணம். ஆசைக்கு எது காரணம்? மனசுதான் காரணம். அதனால்தான் காமன் என்னும் மன்மதன் ஆசைகளின் தெய்வம் - மனஸிஜன் என்று அழைக்கப்படுகிறான். மனஸில் ஜனித்தவன் மனஸிஜன். அதுசரி.... மனசில் ஆசை தோன்ற எது காரணம்! இது புரியாத புதிர். இந்த ஆசைதான் பிறப்பின் விதை - ஜனன ரகசியம். பிறவியின் மூலம் - என்ற பொருளில் ''அவா.... பிறப்பீனும் வித்து'' என்கிறார் திருவள்ளுவர். இதையே இராமாயணம் தத்துவார்த்தமாகச் சொன்னது.

திருமணமான நாள் முதல் இராமனைத் தவிர எதன் மீதும் பற்றின்றி வாழ்ந்தாள் சீதை! துன்பமே அவளுக்கு இல்லை. அரண்மனை, பொன்நகை, சுகபோகம், அதிகாரம் எதன் மீதும் பற்றின்றி இராமன் இருக்கும் இடம் அயோத்தி என்று வனவாசம் என்பதை மகிழ்வுடன் வரித்தாள். காட்டிலும் இன்பமே! துன்பம் இல்லை. பற்றற்ற பரம்பொருளாகிய இராமனைப் பற்றிய வரை அவளுக்குத் துன்பம் இல்லை! துயர் இல்லை! துடிதுடிக்கும் நிலை இல்லை!

அந்தோ... ஒரு பொன் மான் வந்தது! இந்தப் பெண்மான் மனம் கலங்கியது. இராமனுக்கு அந்நியமாக ஒரு மானைக் கண்டு விளையாட வேண்டும் என்று விழைந்தாள். அன்று முதல் துன்பம் அவளைத் தொடர்ந்தது!

பொன்மான் மீது கொண்ட ஆசை பத்து மாத காலம் அசோக வனத்தில் சிறைவாசம் தந்தது. பத்துமாதம் என்பது ஒரு சிசுவின் கர்ப்பகாலம்! சீதை ஜீவான்மாக்களின் பிரதிநிதி. இராமன் பரம்பொருள். பரம் பொருளைப் பற்றிய வரை ஜீவான்மா துன்பம் இன்றி வாழ்ந்தது. வேறொரு பொருள் மீது ஆசை வந்ததும் பத்துமாதம் என்னும் கர்ப்பவாசத்தில் புகுந்தது. ஆசைப்படுகிற உயிர்கள் பிறவி நோயில், கர்ப்பவாசத்தில் சிறைப்படும் என்கிற பேருண்மையைப் பிராட்டியார், லோகமாதா என்ற நிலையில் புரிய வைக்கிற அழகான இடம் இது!

ஆசையே பிறப்பின் மூலகாரணம் என்பதால் ஞானிகள் ஆசையை விட்டு விட காடு மேடு சென்று கடுந்தவம் புரிகின்றனர்.

ஆசையை வழங்கும் மன்மதனை ஆராய்ந்தார் ஆதிசங்கரர். அவன் ஆயுதங்கள் பலவீனமானவை. கையில் வைத்திருக்கும் கரும்புவில் எவ்வளவு பலவீனமானது. அவன் வில்லின் நாணோ வரிசையாய் நிற்கும் வண்டுகள். அவை அறுந்து போகாமல் இருந்தால்தான் ஆச்சர்யம். தாழம்பூ உடைவாள். வெயில் பட்டால் வாடிவிடும். பஞ்ச பாணங்களும் ஐந்து மலர்கள்தான். அவை எவ்வளவு மென்மையானவை. இத்தகைய பலவீனமான ஆயுதங்கள் எவ்வளவு பலசாலிகளை வீழ்த்தி விட்டன தெரியுமா?

சரித்திரத்தையே மாற்றியமைக்கக் கூடிய சாதனையாளர்கள் - அற்புதங்கள் நிகழ்த்தக் கூடிய அரசியல் தலைவர்கள் முறிந்து போனதற்குக் காரணம் காமம்!

வெற்றிகளைக் குவித்த விளையாட்டு வீரர்களை வீழ்த்திய வில் கரும்புவில்! குத்துச் சண்டையில் நடுவர்களை பாயின்டுகள் எண்ண வைத்த வீரரை - சிறைச்சாலையில் கம்பி எண்ண வைத்த நடுவரின் தீர்ப்புக்குக் காரணம் மன்மத லீலை....

அதனால்தான் பகவான் இராமகிருஷ்ணர் தமது துறவுச் சீடர்களுக்குச் செய்த உபதேசத்தில் 'காமினி காஞ்சன ஜெயமே முக்யம்' என்று திரும்பத் திரும்ப உபதேசிக்கிறார். இல்லறத்தாரும் தமது ஆசைகளை ஒழுங்கு படுத்திக் கொள்ள வேண்டும் என்பது காந்திஜி கொள்கை. ''திருமணம் மனித பலவீனத்திற்குக் கிட்டிய சலுகை'' என்று கூறுகிறார் காந்திஜி. இது நியாயமானது.

நமக்குள் ஆசை இருக்கலாம். நாம் ஆசைக்குள் சிக்கிவிடக் கூடாது. இதையே பகவான் இராமகிருஷ்ணர், ''தண்ணீரில்

சுகி சிவம்

படகு இருக்கலாம். ஆனால் படகில் தண்ணீர் இருக்கக் கூடாது'' என்று வற்புறுத்தினார். வாரியார் சுவாமிகளோ, ''நாம் காரில் ஏறலாம்... கார் நம் மீது ஏறக்கூடாது'' என்றார். ஆசை நமக்குள் அடங்கி இருந்தால் குற்றம் இல்லை. ஆசைக்குள் நாம் அடங்கி இருந்தால் கதை முடிந்தது! அதனால்தான் அருணகிரிநாதர்

''பேராசை என்னும்பிணியில் பிணி பட்டு
ஓரா வினையேன் உழலத் தகுமோ''
என்று பாடுகிறார்.

ஆசையின் கொடுமையே, அதை அடையும் வரை ஆர்வம் இருக்கும். அடைந்ததும் நிறைவு வராது. இன்னொன்றின் மீது ஆர்வம் ஊட்டி, எது கிடைக்க வில்லையோ அதற்காக ஏங்க வைக்கும்.

பஸ்ஸில் பயணம் செய்யக் காத்திருக்கிறோம். எல்லா பஸ்களும் கூட்டமாகப் போகிறது. எதுவுமே நிற்க வில்லை. காலம் வீணாய்க் கரைகிறது. எந்தப் பஸ்ஸாவது நிற்காதா என்று ஏங்குகிறோம். ஒன்று நின்றதும் ஓடிச் சென்று ஏறிவிட்டோம். நமக்கு நிறைவு வந்துவிடுமா... கொக்கு மாதிரி கழுத்தை வளைத்து நீட்டி உட்கார ஏதும் இடம் கிடைக்குமா என்று எட்டிப் பார்க்கிறோம். இவ்வளவு பேர் நின்று கொண்டு வருகிறார்களே... அவர்கள் என்ன அறிவற்றவர்களா! இடமிருந்தால் நிற்பார்களா?

முன்னால் இடம் கிடைப்பதைவிட பின்னால் ஆறு பேர் அமரும் இடத்தில் வாய்ப்பு உண்டு என்று அறிவு சொல்ல, அகலாமல் நின்று கடைசியில் இடமும் பிடித்துவிட்டோம். இப்போதாவது நிறைவு உண்டா? அதுதான் இல்லை. தூக்கித் தூக்கிப் போடும் குலுக்கலில் முன்னால் இடம் கிடைக்காதா என்று ஏங்கியபடி இருக்கிறோம். அப்படி ஓர் அதிர்ஷ்டம் அடித்ததும் ஜன்னல் ஓரத்து இருக்கை என்றால் சவுகரியமாக இருக்குமே என்று கவலைப்படுகிறோம். ஜன்னல் ஓரத்து இருக்கை கிடைத்ததும் நமக்குள் சாந்தம் வந்துவிடுமா? மழை பெய்யத் தொடங்கி சட்டையை நனைத்ததும் ஜன்னலை மூடக் கண்ணாடிக் கதவைத் தேடுகிறோம். அது காணாமல் போய் வருடங்கள் ஆகிவிட்டன. இந்த அவஸ்தைக்கு நிற்பதே மேல் என்று தெளிந்து கொண்டு எழுந்து நிற்கிறோம். எதிலும் நிறைவு கிடைக்காமல் தடுமாறுகிறோம். ''பரபரக்க வேண்டாம் பலகாலும் சொன்னேன்'' என்று பாடினார் திருஞான சம்பந்தர். அதையும் நாம் பரபரப்பாகவே படித்து முடித்துவிட்டோம்.



மண்ணாசை பெண்ணாசை, பொன்னாசையில் விலங்குகளுக்கு ஓராசை மட்டும்தான். பெண்ணாசை மட்டும்தான் விலங்குகளுக்கும் மனிதனுக்கும் பொது. அதிலும் செக்ஸ் என்பது விலங்குகளுக்கு வெறும் biological problem. மனிதனுக்கு மட்டும்தான் அது மனசையும் அறிவையும் சேர்த்துக் கெடுக்கிற பிரச்னையாக இருக்கிறது.

மனிதனுடைய மண்ணாசையும் ஆச்சர்யமானது. அபத்தமானது கூட. அமரர் கீரன் அவர்கள் அழகாக விளக்குவார்கள். ''கடல் சூழ்ந்த உலகம் முழுவதும் உனக்கு என்று ஒருவருக்குச் சொன்னால், 'கடல் யாருக்கு?' என்று கவலைப்பட ஆரம்பித்து விடுவார்கள்'' என்பார்.

குரங்குகளைப் பிடிப்பவர்கள் வாய் சிறுத்த பானைகளில் பொரிகடலை போட்டு வைப்பார்கள். கைகளை உள்ளே விட்ட குரங்குள் நிறைய அள்ளிக் கொண்டு கையை வெளியே எடுக்க முயற்சி செய்யும். கை வெளியே வராது. கொஞ்சம் கடலையை உள்ளே போட்டாலும் கை வெளியே வந்துவிடும். ஆனால் போடாது. பானைகளில் கை சிக்கிக் கொண்டதால் மரம் ஏறமுடியாது மாட்டிக் கொள்ளும்.

துன்பங்களுக்கு ஆசையே காரணமாகிறது என்றாலும் விட்டொழிப்பதும் எளிதல்ல. இதற்காகத்தான் பெரியோர்கள், மௌனவிரதம், உண்ணாவிரதம், ஒரு போது என்றெல்லாம் ஏற்படுத்தினார்கள். படிப்படியாக இவற்றை இறையுணர்வுடன் அதிகரிக்கும் போது ஆசைகள் குறையும். வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக மலரும்.

வருத்தமான சூழ்நிலையில் தவித்துக் கொண்டிருந்த அந்த இடம், இப்போது ஆச்சரியம் கலந்த கேள்விக்குறியாயிற்று.

''அப்படியா... அடடே... பிழைக்கத் தெரியாத மனிதனாய் இருக்கிறானே, இந்த செல்வராஜ். அதை அப்போதே சொல்லி இருந்தால் ஒரு ஈ... காக்கை கூட அவன் மீது கை வைத்திருக்காதே....'' என்று ஆயாசப்பட்டார், அந்தப் போக்குவரத்துக் கழக தலைமை அதிகாரி.

இடம் -

பொது மருத்துவமனை. தீவிர சிகிச்சைப் பகுதி.

பார்வையாளர் அதிகம் அனுமதிக்கப்படவில்லையானாலும், பாதிக்கப்பட்ட செல்வராஜின் நிலைமை கொஞ்சம் சீரியஸ் என்பதால், குடும்பத்தினரையும், அவன் பணிபுரியும் போக்குவரத்துக் கழக

# காணிக்கை

அதிகாரிகள், முக்கிய அலுவலர்களைத் தவிர்க்க முடியவில்லை.

''எனக்கும் அதுதான் சார் ஆச்சரியம். செல்வராஜ், 'நானும் உன் ஜாதிக்காரன் தான்' என்ற ஒரு வார்த்தை சொல்லி இருந்தால் இந்த அளவுக்கு அசம்பாவிதம் நடந்தே இருக்காது. அவர்கள் பேசாமல் போய் இருந்திருப்பார்கள்!'' சக டிரைவர் ஒருவர், தம் மேலதிகாரியின் அசுத்தை மரியாதையுடன் ஆமோதித்தார்.

''ச்சோ... சுண்டுவிரலால் கிழங்கெடுக்கிற இந்தக் காலத்திலே இப்படி சமயோசிதம் இல்லாமல் வம்பை விலைக்கு வாங்கி விட்டானே இந்த செல்வராஜ்...'' என்று முகம் கவித்தார், இன்னொரு டிரைவர்.

செல்வராஜ். அரசுக்குச் சொந்தமான போக்குவரத்துக் கழகத்தில் பஸ் டிரைவர்.

இன்று பிற்பகல் மூன்று மணிக்கு டிரிப் எடுத்து, அந்த நெடுஞ்சாலையில் தனக்கே உரிய வேகத்தில் பஸ்ஸை விரட்டிக் கொண்டிருந்தான்.

பின்னால் ஒரு லாரி.

ஜாதிப் பெயர் ஒன்றின் 'பேனர்' கட்டிக் கொண்டு, 'ஹாரன்' அடித்து வழி கேட்டது.

செல்வராஜும் கிட்டத்தட்ட அறுபது கி. மீ. வேகத்தில் வந்தானாகையால் 'சைடு' ஒதுக்கித் தர அவசியமில்லை' என்றுதான் எண்ணினான். எனினும் 'கேட்ட' மரியாதைக்காக 'சைடு' ஒதுக்க முயன்ற போது, எதிர்த் திசையில் ஏதாவது ஒரு வாகனம் வந்தவண்ணம் இருந்தது. தவிர குறுகலான சாலை. மெட்டல் போர்ஷனை விட்டு இறக்கினால் வண்டி குடை சாய்ந்து விடக்கூடிய அபாயம். சாலை ஓரங்கள் ஆங்காங்கே கிழிந்து போய் இருந்தன.

எனவே, ரொம்ப தொலைவுக்கு அப்பால் விசாலமான பகுதி வந்த பிறகு தான் ஒதுங்கி, வழி விட முடிந்தது.

ஆனால் -

லாரிக்காரர்களுக்கு அது மானப் பிரச்னையாகி விட்டது.



லாரியை முன்னால் கொண்டு வந்து பஸ்ஸை மறித்துக் கொண்டார்கள்.

லாரி நிறைய ஆட்கள். சுமார் நூறு பேருக்கு மேல் இருக்கும். டவுனில் இன்று, அவர்களின் ஜாதி சம்பந்தமான மாநில மாநாடாம். பேரணியில் கலந்து கொள்ள வந்திருக்கிறார்கள். வரட்டும்.

லாரியிலிருந்து அத்தனை பேரும் பொலபொலவென்று குதித்தார்கள்.

''அயோக்கிய ராஸ்கல்... அவ்வளவு தூரம் சைடு கேட்டுட்டு வர்றோம். கொடுக்காமல் வர்றீயா. திமிர் பிடித்த நாயே.''

செல்வராஜை கீழே இழுத்துப் போட்டார்கள்.

''ஐயா... நான் சொல்வதைக் கேளுங்கள். வேண்டுமென்றே அப்படி வரலை...'' சமாதானம் சொல்ல முயன்றான், செல்வராஜ்.

அதைக் கேட்க யாருக்குமே அங்கு பொறுமை இல்லை.

''என்னடா அவன்கிட்டே பேச்சு. கழுதையை அடிக்க நொறுக்குடா.''

தலைவன் போல் ஒருவன் ஆணையிட, மறுகணம் -

நின்ற நிலைக்கு அத்தனை பேரும் கூடி செல்வராஜை காலால் உதைத்துப் பந்தாடினார்கள். தார்க்குச்சியால் சுழற்றிச் சுழற்றி அடித்தார்கள். செல்வராஜின் சட்டை, பேண்ட் எல்லாம் கிழிந்தன.

எங்கிருந்தோ ஒரு கருங்கல் - அம்பாய் எகிறி வந்து, அவனது கண்ணாங்கூட்டை உடைத்து ரத்தம் பீறிட்டது.

''ஐயோ... அம்மா... தாங்க முடியலையே...'' என்று கண்ணைப் பொத்திக் கொண்டு கதறினான், செல்வராஜ்.

''ஐயா... என்னை விட்டுடுங்க.. நான் ஒரு தப்பும் பண்ணலை. உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். விட்டுடுங்க.''

கை எடுத்துக் கும்பிட முயன்று, தோற்று, கரும்புச் சக்கையாய் மூர்ச்சையாகி விழுந்தான், செல்வராஜ்.

சில நிமிடங்களுக்கெல்லாம் காவல் நிலைய வேன் வந்தது.

வானை நோக்கிச் சுட்டு, கும்பலைக் கலைத்தது.

குற்றுயிராய்க் கிடந்த செல்வராஜ் ஆம்புலன்சில் ஏற்றப்பட்டான்.

''செல்வராஜ் பிழைப்பானா?''

எல்லோருடைய முகத்திலும் பீதி, கவலை, பரபரப்பு.

''இரவு ஏழு மணியைக் கடந்து விட்டால் ஆபத்தில்லை'' என்று சொல்லி இருந்தார்கள், டாக்டர்கள்.

அந்த நேரம்.. நல்ல நேரமாய் முடிய வேண்டுமே என்று அனைவரும் கவலையோடு காத்திருந்த போதுதான், செல்வராஜ் அப்பா சொன்னார்.

''ஐயோ... கடவுளே. நாங்களும் அவங்க இனம்தானே. இருந்தும் இந்த மாதிரி துவம்சம் பண்ணிட்டாங்களே, என் பிள்ளையை.''

அதாவது, அடித்த கும்பலும் அடி வாங்கிய செல்வராஜு'ம் ஒரே ஜாதிக்காரர்கள். அதைக் கேட்டதும், 'செல்வராஜ், அடிக்க வந்தவர்களிடம் தன்னை இனம் காட்டிக் கொள்ளாத காரணம் என்ன?' என்ற வினா எழுந்தது.

'சொல்லி இருந்தால், அவர்களின் முரட்டுத்தனமான தாக்குதலிலிருந்து தப்பித்திருக்கலாமே' என தலைக்குத் தலை அங்கலாய்த்தார்கள்.

நேரம் ஊர்ந்து கொண்டிருந்தது.

மணி 6:55

ஐ.சி.யூ. அறைக்குள் இருந்து ஒரு நர்ஸ் ஆமை போல் தலையை நீட்டி போக்குவரத்துக் கழக தலைமை அதிகாரியை மட்டும் சைகையால் உள்ளே கூப்பிட்டாள்.

உள்ளே -

தமிழினியன்

கண், நெற்றி, தலை, கை, கால் மொத்தத்தில் செல்வராஜ், பாண்டேஜ் ராஜாக படுத்திருந்தான். மூர்ச்சை தெளிந்து ஒரு கண்ணால் மட்டும் பார்த்தான்.

அதிகாரியை அடையாளம் புரிந்து, வணக்கம் சொல்ல முற்பட்டான்.

''பரவாயில்லைப்பா...'' என்று கையமர்த்தினார், அதிகாரி.

''இனி ஆபத்தில்லை. ஆனால், ஒரு கண் பார்வைதான் திரும்பிக் கிடைக்குமா என்பது சந்தேகமாய் இருக்கிறது'' என்றார், பெரிய டாக்டர்.

''அப்படியா...'' சற்றே அதிர்ச்சி யடைந்தாலும், ''உயிர் பிழைத்ததே... அது போதும்'' என்று திருப்தி அடைந்தார், அதிகாரி. பின்னர், அரித்துக் கொண்டிருந்த அச் சந்தேகத்தை மெள்ளக் கேட்டார்.

''ஏன் செல்வராஜ்... நீயும், லாரியில் வந்து அடித்தவர்களும் ஒரே கேஸ்ட்தா னாமே. அதை நீ அவர்களிடம் சொல்லி இருந்தால்... இப்படி ஒரு கண்ணை இழக்கும் அளவுக்கு அசம்பாவிதம் நடந்திருக்காதே.''

''உண்மைதான், சார். சொன்னால் விட்டிருப்பார்கள்தான்'' என்று விரக்தியாய்ப் பெருமூச்சு விட்டான், செல்வராஜ்.

''பின்னே ஏன் சொல்லவில்லை?''

''மனசு வரலை, சார். அப்படிச் சொல்வது யாசகத்தை விட கேவலமாகப் பட்டது. அதான் சொல்லலை.''

அதிகாரி புரிபடாமல் அவனைப் பார்த்தார்.

அவன் சொன்னான் :

''நான் என் ஜாதியைச் சொல்லித் தப்பிக்கிறது சரின்னு ஆயிட்டால், வேற்று ஜாதிக்காரன் அவர்களிடம் அடி வாங்குவது நியாயம்னு ஆயிடும் சார். அப்புறம், மனிதனுக்கு மனிதன் நியாயம் என்பது மாறி, ஜாதிக்கு ஜாதி நியாயமாயிடும்...''

''நீ சொல்வது சரிதான், செல்வராஜ். ஆனால்... இப்ப உன் கண் பார்வை போயிடுச்சே.''

''பரவாயில்லை, சார். மனித நியாயத்துக்கு நான் செலுத்திய முதல் காணிக்கையாய் இருக்கட்டும்.''

திணறித் திணறிப் பேசி முடித்த செல்வராஜின் ஒற்றை விழியிலிருந்து கண்ணீர் அருவியாய்ப் பொங்கியது.

# வெற்றிப் படங்கள் மட்டுமா? சில தோல்விகளும் உண்டு!

**ரா**மச்சந்திராவுக்குப் பதிலாக நியமிக்கப்பட்ட காமிராமேன் மார்கஸ் பாட்லே. இதைக் கேள்விப்பட்ட உடனே தமிழ்த் திரை உலகில் பெரிய பரபரப்பு ஏற்பட்டது. காரணம், மார்கஸ் பாட்லே சுதந்திரமாக இயங்க விரும்புகிறவர். நானும் அப்படித் தான். 'ஆக, நாங்கள் இருவரும் சேர்ந்து எப்படி வேலை செய்ய முடியும்? சிக்கல் ஏதும் இல்லாதிருக்குமா?' என்று பேசத் தொடங்கினார்கள்.

எனக்கு பாட்லேயிடம் ரொம்ப மதிப்பு உண்டு. கேமிரா நுணுக்கங்களில் அவர் அதாரிட்டி. அவருடைய 'லைட் டிங்'கை மிஞ்ச வேறு ஆள் கிடையாது. ஆனாலும் எனக்கு என்ன பிரச்னை என்றால், இதுவரை நான் டைரக்ட் செய்த படங்கள் எல்லாவற்றிலும் 'மிச்சல்' கேமிராதான் உபயோகித்திருந்தேன். இந்தக் காமிராவில் என்ன காட்சி படம் எடுக்கப்படுகிறதோ அதை, 'வியூஃபைண்டர்' மூலம் பார்க்க முடியும். இது எனக்கு ரொம்ப வசதியாக இருந்தது. கோணங்களை நான் 'ஓ.கே.' செய்து விட்டு, படப்பிடிப்பை கேமிராமேனிடம் விட்டு விடுவேன். ஆனால் மார்க்கஸ் பாட்லே கையாண்டது ''ஏரிஃப்ளெக்ஸ்'' காமிரா. இதில் 'வியூ ஃபைண்டர்' மூலம் பார்க்கும் வசதி கிடையாது. காமிரா கோணங்களை ஓர் உத்தேசமாக 'ஸெட் அப்' செய்து விட்டு பொறுப்புக்களை காமிராமேனிடம் விட்டு விட வேண்டியதுதான்.

இப்போது என்ன செய்வது? நான் நேரே பாட்லேயிடம் போய் மனம் விட்டுப் பேசினேன். ''நீங்கள் ''ஏரிஃப்ளெக்ஸ்'' உபயோகிப்பதால் எனக்கு அசௌகரியம் உண்டு. உங்களுக்கு ''மிச்சல்'' காமிராவைக் கையாளுவதில் ஆட்சேபணை உண்டா?'' என்று கேட்டேன்.

**பா**ட்லே சில வினாடிகள் யோசித்து விட்டு, ''எனக்கு இரண்டு காமிராக்களையுமே கையாளத் தெரியும். 'ஏரிஃப்ளெக்ஸ்' தான் எனக்குப் பிடிக்கும் என்றாலும், உங்களுக்காக இந்தப் படத்துக்கு 'மிச்சல்' காமிராவைப் பயன்படுத்துகிறேன்'' என்றார்.

'பாட்லே பிடிவாதக்காரர்; வளைந்து கொடுக்க மாட்டார்' என்றெல்லாம் நண்பர்கள் சிலர் பயமுறுத்தியிருக்க, விஷயம் இவ்வளவு சுலபமாக முடிந்து போனதில் எனக்கு வியப்பும் மகிழ்ச்சியும் பொங்கியது. நன்றி கூறியவாறு பாட்லேயின் கைகளைப் பற்றிக் குலுக்கி விட்டுத் திரும்பினேன்.

அதன் பின் படம் வளர்ந்தது. மார்கஸ் பாட்லே 'லைட்டிங்' அமைக்கத் தம் இஷ்டத்துக்கு நேரம் எடுத்துக் கொள்வார். இது சில சமயம் பொறுமையைச் சோதிப்பதாகக் கூட இருக்கும். ஆனால் அவர் வேலை வெகுநேர்த்தி; படப்பிடிப்பு பிரமாதம்.

'சாத்தி' என்ற பெயரில் வெளியான அந்த ஹிந்தி படம், 'சூப்பர் ஹிட்' ஆகா விட்டாலும் வசூலில் வெற்றியைப் பெற்றது. அதோடு 'கிளாஸ்' திரைப்படம் என்றும் பெயரெடுத்தது.

**நா**ன் வெற்றிப் படங்களை மட்டும் எண்ணி மகிழ்ச்சியில் திளைப்பவன் அல்ல. தோல்விகளையும் நினைத்துப் பார்ப்பேன்; காரணங்களை ஆராய்வேன். அப்படி நோக்குகையில் ''சாத்தி'' ஹிந்தி படத்துக்கு முன்னதாகவே என்னுடைய டைரக்ஷனில் வெளியான ''நைரோஷ்னி'' பற்றிக் குறிப்பிட வேண்டும். ''புதிய ஒளி'' என்பது இதன் அர்த்தம். இந்த வங்க மொழிக் கதையை வாசு ஸ்டுடியோ அதிபர் வாசுமேனன் வாங்கியதோடு, அதில் நடிக்க ராஜ்குமாரையும் பிஸ்வஜித் என்ற மற்றொரு நடிகரையும் 'புக்' செய்திருந்தார்.

என்னிடம் கதையைச் சொல்லி நான் டைரக்ட் செய்ய வேண்டும் என்று வாசுமேனன் கேட்டுக் கொண்ட போது, கதை எனக்குப் பிடித்துப் போனதால் உடனே ஒப்புக் கொண்டேன். கூடவே ஓர் ஐயப்பாடும் எழுந்தது.

படத்தில் அண்ணன் - தம்பி என்று இரு கேரக்டர்களில் தம்பிதான் ஹீரோ. அண்ணன் 'சப்போர்ட்டிங் கேரக்டர்'தான். ஹீரோவாக ராஜ்குமாரையும் அண்ணன்

டைரக்டர் ஸ்ரீதர்

கேரக்டருக்கு பிஸ்வஜித்தையும் வாசு 'புக்' பண்ணியிருந்தார். ஆனால் அசல் வாழ்க்கையில் பார்த்தால் பிஸ்வஜித் இளைஞர்; ராஜ்குமார்தான் முதியவர்! இது எப்படி பொருந்தும்? யதார்த்தமாய் இராதே? வாசுமேனனிடம் இதைக் கூறிய போது, ''அட, ஆமாம்! இப்போது என்ன செய்ய முடியும்? ஒப்பந்தம் கையெழுத்தாகி விட்டதே?'' என்றார். ''ராஜ்குமாரை நேரில் சந்திப்போம்'' என்றேன்.

ராஜ்குமாரோ, ''ஏன் ஸ்ரீதர், நை ரோஷ்ணி படத்தில் நான் நடிப்பதில் உங்களுக்கு இஷ்டமில்லையா?'' என்று கேட்டார்.

'சரி, தவறாகப் புரிந்து கொண்டு விட்டார்' என்று எனக்குத் தோன்றி விட்டாலும் என் கருத்தை மீண்டும் விளக்கினேன். ''அதனால் என்ன? எனக்குக் கொஞ்சம் இளமையாக மேக்-அப் போட்டு விட்டு, பிஸ்வஜித்துக்கு முதுமையைக் காட்டுகிற மாதிரி மேக்அப் போட்டால் பிரச்னை தீர்ந்தது!'' என்றார் ராஜ்குமார்.



● மார்கஸ் பாட்லே

ஒப்பந்தம் முடிந்து விட்ட நிலையில், வாசுமேனனும் ராஜ்குமாரின் கருத்தை ஏற்றுக் கொண்டுவிட்டபடியால் என்னால் மேற்கொண்டு ஏதும் பேச முடியாமல் போயிற்று.

படம் சரியாக ஓடவில்லை. ராஜ்குமாரை இளமையாய்க் காட்ட முயன்றதை மக்கள் ஏற்றுக் கொள்ளாததுதான் முக்கிய காரணம்.

நான் கண்ட இன்னொரு தோல்வி நெஞ்சில் ஓர் ஆலயத்தின் தெலுங்குத் தயாரிப்பு. ஹைதராபாத் நண்பர், படத் தயாரிப்பாளர் கன்னையா இதற்கு என்னை ரொம்ப வற்புறுத்தி வந்தார். நாலு வருஷங்கள் நானும் பிடிகொடுக்காமல் சமாளித்து வந்தேன். அதற்கு மேல் தட்ட முடியாமல் கங்காவை ஹைதராபாத்துக்கு அனுப்பினேன். அன்னபூர்ணா ஸ்டுடியோவில் கன ஜோராக நர்ஸிங்ஹோம் ஸெட் போடப்பட்டது. நாகேஸ்வரராவ், சாவித்திரி, ஜக்கையா என்று அன்றைய தெலுங்குத் திரையுலகில் கொடிகட்டிப் பறந்தவர்கள் நடித்தும் கூட படம் தோல்வி கண்டது!

தமிழும் ஹிந்தியும் அளித்த மாபெரும் வெற்றிகளை தெலுங்கு ஏன் எனக்குத் தரவில்லை? முக்கியமான கதாபாத்திரங்களுக்கு தவறான நட்சத்திரங்களை நான் தேர்ந்தெடுத்தது தான் காரணம்!

தமிழில் தேவிகாவின் பாத்திரத்தைத் தெலுங்கில் ஏற்றவர் சாவித்திரி. அவர் உடல்வாகு பருமனாக இருந்ததால், அந்தக் கதாபாத்திரம் பெற வேண்டிய அனுதாபத்தைப் பெறாமல் போய் விட்டது. பெரும்பாலான ஷாட்டுகளில் மக்களின் கவனம் சாவித்திரியின் பருமனான உடல் மீது போகாதபடி அமைத்திருந்தேன். ஆயினும் பயனில்லை. ஜக்கையாவும் வாட்டசாட்டமான உடல்வாகு கொண்டவர். அவரைப் படுக்கையில் கிடக்கும் நோயாளியாகச் சித்திரித்ததை ரசிகர்களால் ஏற்க முடியவில்லை. அவர்களுக்கு நோயாளி என்றால் முன்தாடி முகத்துடன் எலும்பும் தோலுமாய்ப் படுக்கையில் கிடக்க வேண்டும்!

நெஞ்சிருக்கும் வரை படத்துக்குப் பிறகு சில காலம் சென்றுதான் சித்ராலயாவின் அடுத்த தயாரிப்பு பற்றி யோசித்தோம். இம்முறை ஒரு பிரும்மாண்ட தயாரிப்பாக அது அமைய வேண்டும் என்று தீர்மானித்தேன். அப்போது ஓர் ஐடியா தோன்றியது. 'எம். ஜி. ஆரை வைத்து ஆரம்பித்து, இடையில் நின்று போய் விட்ட ''அன்று சிந்திய ரத்தம்'' கதை இருக்கிறதே! அதற்குப் புதிய கோணத்தில் மறுபடி புத்துயிரூட்டினால் என்ன? எம்.ஜி.ஆருக்கென்று ஸ்பெஷலாய் எழுதப்பட்ட கதையில் வேறு யாரையாவது நடிக்க வைத்தால் சரியாக வருமா? ஒருவேளை தேவையற்ற சர்ச்சைகள் எழுமோ? அது படத்தின் வெற்றியைப் பாதிக்குமோ?' சந்தேகங்கள் எழத்தான் செய்தன!



'கட் அவுட் புகழ்...'

# முதல்வருக்குக் 'கட் அவுட் புகழ்' பட்டம் தரலாமா?

● எம். ஜாபர் ஸலாம், திட்டச்சேரி.

*? எங்க வீட்டு மாடு 'மா மா' என்று கத்துவதற்குப் பதில் 'ஜெ ஜெ' என்று கத்துவதாகக் கனவு கண்டேன்! என்ன அர்த்தம்?*

! 'மா' என்று கத்துவது பசு. அது வணக்கத்துக்குரியது. ஜெயும் அப்படியே. பசு கன்றின் குரல் கேட்டு உருகும். ஜெயும் மக்கள் குறை கேட்டுத் துயர் துடைக்கிறார். அது அன்னையின் பரிவு. பசு என்றதும் காமதேனு நினைவு வரும். ஜெயும் காம தேனு போல் மக்களுக்கு அள்ளித் தரு கிறார்.... இதற்கு மேல் எழுதினால் பால் வாரியத்தின் தலைமைப் பதவி உமக்குக் கிடைத்து விடலாம்... நிறுத்திக் கொள் கிறேன்.

● எம். சிவா, தேனி.

*? 'தேசிய முன்னணி பதுங்கும் புலி' என்கிறாரே சிவாஜி?*

! பதுங்கியபடியே இருந்தால் என்றைக்குப் பாய்வது என்பதுதான் கேள்வி!

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபுரம்.

*? ஒரு பதவிக்கு ஒருவரை ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கும் போது அங்கே ஜனநாயகம் எப்படி இருக்கும்?*

! ஏகமனதாகத் தேர்ந்தெடுப்பதில் ஜன நாயகம் இல்லாமல் போகவில்லை. ஒரு தனி நபர் பொறுப்பில் விடப்படும் போது தான் ஜனநாயகம் செத்து விடுகிறது. திருப் பதியில் சூரர் போல் காங்கிரஸ் காரிய கமிட்டிக்குத் தேர்தல் நடத்தி, பிறகு எல்லா ரிடமும் ராஜினாமா பெற்று, ''திருத்தி'' அமைத்தார் நரசிம்மராவ். இப்போது பார்லிமெண்டரி போர்டு அமைக்கும் முழுப் பொறுப்பு அவரிடமே விடப்பட்டு விட்டது! அப்புறம் ஜனாதிபதி தேர்தலுக்கு யாரை நிறுத்தி வைப்பது என்று தீர்மா னிக்கும் முழுப் பொறுப்பும் பி. வி. என்னிடம்! 'பழைய குருடி கதவைத் திறடி.' என்று ஆரம்பித்து விட்டது காங்கிரஸ்.

● வீ. சோழன், செம்போடை.

*? 'பேருந்துகளில் தீயணைப்புக் கருவி பொருத்த வேண்டும்' என்று முதல்வர் ஆணை பிறப்பித்துள்ளாராமே?*

! தீயணைப்புக் கருவி தயாரிப்பவர்கள் கூடவே 'பெட்டி' தயாரிக்கலாம் - கவ னிக்க வேண்டியவர்களைக் கவனிக்க.

● என். ரஜினி தேவராஜ், ஈரோடு.

*? பூலான் தேவி...?*

! அரசியல்வாதிகள் பலர் தேர்ந் தெடுக்கப்பட்ட பின் செய்யும் காரியங் களை முதலிலேயே செய்தவர்.

● கே. எம். கருப்பண்ணசாமி, கோபி.

*? மகாத்மா காந்தியைக் கொன்ற கோட் சேக்கு நினைவு நாள் கொண்டாடுகிறது ஒரு கூட்டம். இது நியாயம் என்றால் தனுவுக்குக் கவிதை எழுதுவதில் என்ன தவறு?*

! இரண்டுமே தவறுதான். அருவருப்பு அளிப்பவைதான். ஒரு தவறு, இன்னொரு தவறை நியாயப்படுத்தாது.

● டி. எஸ். டி. ராயன், சென்னை. ❑

*? ரிஸர்வ் வங்கி கவர்னரை நீக்க வேண்டும் என்ற கோரிக்கை நியாயமானதுதானா?*

! ரொம்ப நியாயம். வங்கிகள் ஹர்ஷத் மேத்தாவுடன் தப்புக் காரியங்களில் ஈடுபட் டிருந்தன என்பது ரிஸர்வ் வங்கிக்கு



தேர்தலும் படிப்பும



பாய்வது எப்போது?

**நீங்கள் கேட்டவை – தராசு**

நன்றாகத் தெரிந்தே இருந்தது. அப்படித் தெரிந்திருந்தும் உடனடி நடவடிக்கை எடுக்கவில்லை என்பது ஜானகிராமன் கமிட்டி அறிக்கையிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. இதற்குப் பொறுப்பு ஏற்க வேண்டியவர் வேங்கடராமனே.



☛ பழைய குருடி...



☛ பிரச்னை தீர்ந்தது!



☛ குதிரையும் லாயமும்

● மோகனப்ரபா, கள்ளியம் புதூர்.

*? நம் முதல்வருக்கு 'கட்அவுட் புகழ்' என்ற பட்டத்தை அளிக்கலாமா?*

! அதைவிட ' 'பார்' புகழ் டான்ஸி ராணி' பொருத்தம். ஆனால் கிடைத்திருப்பது என்னவோ மகிள சிரோமணியாமே!

● கே. பி. சாரதி, வேலூர்.

*? 'தேசிய முன்னணியால்தான் நாட்டைக் காப்பாற்ற முடியும்' என்கிறாரே, கருணாநிதி?*

! தேசிய முன்னணியை யார் காப்பாத்தறது துன்னேன்!

● மல்லிகை மன்னன், மதுரை.

*? 'குதிரைகளை ஓட விட்டு விட்டு லாயத்தைப் பூட்டுவது போல விடுதலைப் புலிகளே இல்லாத தமிழகத்தில் அவ்வியக்கத்துக்குத் தடை விதித்திருக்கிறார்கள்' என்று நையாண்டி செய்கிறாரே, கருணாநிதி?*

! இவர் பத்மநாபா கொலைக்குப் பின் குதிரைகளைத் தப்ப விடாமல் இருந்திருந்தால் இப்படி பேசும் தகுதி பெற்றிருப்பார். அன்று இதே கருத்தைத்தான் கல்கி கார்ட்டூன் போட்டுக் காட்டியது! நிற்க, தடைச் சட்டத்தால் மட்டும் புலிகளை ஒழித்துக் கட்டி விட முடியாது. அவை வந்து போய்க் கொண்டுதானிருக்கும். ஆந்திரா, கர்நாடகா என்று அகலக் கால் வைக்கவும் செய்யும். அதனால்தான் அரசியல் தீர்வுக்குப் பாடுபட வேண்டும் என்பது.

● சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? 'தேர்தலில் போட்டியிடுபவர்களுக்கு படிப்புத் தகுதி நிர்ணயிக்க வேண்டும்' என்கிறாரே, பால்கிவாலா?*

! படிப்புத் தகுதியால் பண்பாட்டுத் தகுதியும் வாய்க்கப் பெறும் என்றால் அவர் கூறுவது சரிதான். ஆனால் நம் கல்வி அமைப்பு - பாடத் திட்டம் அப்படி இல்லையே!

● சுபாஷ்சந்திரபோஸ், செட்டிகுளம்.

*? உங்களுக்கு எவ்வளவு சொத்து இருக்கிறது?*

! இந்தக் கேள்வி அரசியல்வாதிகளிடம் கேட்கப்படும் போது இந்த நாடு உருப்பட்டு விடும்!

● எம். ரேவதி, மன்னார்குடி.

*? மலைஜாதி பெண்களுடன் முதல்வர் ஆடிய நடனம் எப்படி?*

! அவர் ஆடிய கௌரவமான நடனம் அது.

● த. கு. பா. பட்டு துரை, சிதம்பரம்.

*? குவாட்டருக்கு ஆறு ரூபாய் விலை குறைப்பு குறித்து?*

! இலவசமாகக் கொடுத்தால் இன்னும் கூட வோட்டுக் கிடைக்கும் என்பதை இனி சிந்திப்பார்கள்!

● மாரி வெற்றிவேல், பட்டுக்கோட்டை.

*? ஆயிரம் கார் பவனி தவிர்த்து முதல்வர் ஹெலிகாப்டர் பயன்படுத்தினால் அனாவசிய செலவு குறையுமே?*

! அதாவது சாராயம்தான் கெடுதல், பிராந்தியல்ல என்கிறீர்கள்!

● என். நாரம்புநாதன், கரண்டை.

*? புரியாத புதிர் எது?*

! மதுரையில் மாநாடு நடக்கும் மைதானத்தைச் சுற்றி உயரமாகச் சுவர் எழுப்பப்படுவது. மகாமக அனுபவத்திலிருந்து பாடம் கற்கவில்லையே! மதுரையில் ஒன்றும் நேராமல் போகலாம்; ஆனாலும் ஆபத்தான காரியம்தான் இது.

● மருதேவன், கல்கத்தா.

*? ராஜேஷ்கன்னா, சத்ருகன்சின்ஹா - வெற்றி யாருக்கு?*

! அப்பாடா! ராஜேஷ் வெற்றி பெற்று டிம்பிளிடம் அன்பு முத்தம் பெற்று விட்டார். நாட்டை உலுக்கி எடுத்த ஒரு மகத்தான பிரச்னை தீர்ந்தது! இனி என்ன கவலை!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
டி. எஸ். டி. ராயன்,
23, ஆர். கே. புரம், 3வது தெரு,
மே. மாம்பலம்,
சென்னை - 33.

**பம்பாய்க் கடிதம் :**

# பழைய காங்கிரஸுக்குப் புதிய காரியதரிசி



☛ ரதன் டாடா



☛ ரஸ்ஸி மோடி

**இ**துவரை மகாராஷ்டிர மந்திரி சபையில் வீட்டு வசதி மற்றும் நகரக் குடியிருப்பு இலாகா அமைச்சராக இருந்த ஐம்பது வயதான சுசில்குமார் ஷிண்டே, அகில இந்திய காங்கிரஸ் கட்சியின் புதிய காரியதரிசியாக நியமிக்கப்பட்டிருக்கிறார். சென்ற ஆண்டு ஆகஸ்டு மாதம் இவரிடம் தமது அதிருப்தியைக் காட்ட விரும்பிய முதல்வர் நாயக், சட்டம், நீதித் துறைகளை இவரிடமிருந்து பறித்த போது இவர், ''அரசியலில் ஒருவர் இன்று வீழ்வதும், பின்னர் எழுந்திருப்பதும் சகஜம். இந்த மாற்றம் நான் இதைவிடப் பெரிய பதவியைப் பெறவிருக்கிறேன் என்பதையே காட்டுகிறது'' என்றார். அவர் வாக்கு பலித்து விட்டது. தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த இவர் தம் இளமையில் ஆஸ்பத்திரி 'வார்டு பாய்' ஆகவும், பியூனாகவும், கான்ஸ்டபிளாகவும் வேலை செய்தவர்.

**ப**ம்பாயின் கோட்டைப் பகுதியில் 'பாம்பே ஹவுஸ்' என்றால் தெரியாதவர்கள் இருக்க முடியாது. நாடெங்குமுள்ள டாடா தொழில் நிறுவனங்களின் தலைமைச் செயலகம் இது. இருபது அங்கத்தினர்களைக் கொண்ட டிஸ்கோவின் (Tisco) கம்பெனி போர்டு கூட்டம் அண்மையில் கூடிய போது, ஒரு பெருத்த சலசலப்பு எதிர்பார்க்கப்பட்டது. இதுநாள் வரை இதன் சேர்மனாகவும் மானேஜிங் டைரக்டராகவும் பணியாற்றிய ரஸ்ஸிமோடி ஓய்வு பெற இருக்கிறார். அவர், தாம் நியமிக்கும் ஜே. ஜே. இரானிதான் தமக்குப் பின் தம் பதவியை வகிக்க வேண்டும் என்று வற்புறுத்தி வந்தார். இது டாடாவின் குடும்பத்தினருக்கு, குறிப்பாக ரதன் டாடாவுக்கு உடன்பாடாக இல்லை. இதனால் இதுநாள் வரை தனது தொழில் நிறுவனங்களில் அமைதியைக் காத்து, ஒரு குடும்பம் போல் இயங்கி வந்த டாடா கம்பெனி கருத்து வேறுபாடுகளால் பிளவுறும் போல் தோன்றியது. பிறகு தங்களுக்குள் பேசி ஒரு சமரசத்திற்கு வந்த நிர்வாகத்தினர் ரஸ்ஸி மோடியே இன்னும் சில மாதங்கள் சேர்மனாகத் தொடர ஒப்புக் கொண்டனர். ஜே. ஜே. இரானி மானேஜிங் டைரக்டராக மட்டும் இருப்பார். மேல் மட்டத்தில் இப்படிப் பூசல் இருந்தாலும் டாடா நிறுவனம் இதுவரை காணாத அளவுக்குச் சென்ற ஆண்டில் 1.978 மில்லியன் டன் எஃகை உற்பத்தி செய்தது. தனது பங்குதாரர்களுக்கு 35 சதவீதம் போனஸ் கொடுத்தது!

**மே**ற்குக் கடலோர மாநிலங்களான கேரளம், கோவா, மகாராஷ்டிரம், குஜராத் இவற்றில் ஜூன் பிறந்தால் மழைக்காலம் துவங்கும். இந்த ஆண்டு இம் மாநிலங்களில் மட்டுமல்ல, அகில இந்திய அளவிலும் சராசரி மழையளவு 92 சதம்தான் இருக்கும் என்று கணிக்கப்பட்டிருக்கிறது. மழைக் காலம் சற்றுத் தாமதமாகத் துவங்கும் என்றும் கூறப்படுகிறது. ''காடுகளின் அழிவினாலும், பசிபிக் கடலின் தட்பவெப்பநிலை ஏறியதாலும் பருவ நிலையே மாறி விட்டது'' என்கின்றனர் ஆராய்ச்சியாளர்கள். சென்ற ஆண்டே வறட்சியைக் கண்ட பாரதம், குடிநீர் போதாமலும், தானியங்கள் சரிவர விளையாததாலும், கால்நடைத் தீவனங்கள் சரியாகக் கிடைக்காததாலும் 8000 கோடி ரூபாய் அளவு உற்பத்தியில் நஷ்டம் அடைந்தது. மகாராஷ்டிரத்தில் மட்டும் 28,000 கிராமங்கள் வறட்சியால் அவதியுற்றன.

**– ராஜீவி நரசிம்மன்**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600032. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka